## நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | குருவிளையாடல் |
| ஆசிரியர் | : | திலகவதி ராஜசேகர் |
| முதற்பதிப்பு | : | டிசம்பர்-2009 |
| இரண்டாம்பதிப்பு | : | ஜூலை-2020 |
| பதிப்புரிமை | : | ஆசிரியர் |
| பக்கங்கள் | : | 112 |
| எழுத்து | : | 12 புள்ளிகள் |
| தாள் | : | 80gsm மேப்லித்தோ |
| வெளியீடு | : | பகவான் யோகிராம்சுரத்குமார் சேவா டிரஸ்ட் 22, ஞானகிரி ரோடு, சிவகாசி *626 189.* |
| விலை | : | Rs. 50 |
| அச்சிட்டோர் | : | ராஜ்திலக் பிரிண்டர்ஸ் பி.லிட்., சிவகாசி. |

## பொருளடக்கம்

ௐ

## ஆசிரியர் முன்னுரை

நம் பாரதபூமியில் பூஜைகளும் கொண்டாட்டங்களும் காலம் காலமாக இருந்து வருகின்றன. சரஸ்வதிபூஜை என்று சொல்கிறோம். ஆனால் தீபாவளியைப் பண்டிகையாகக் கொண்டாடுகிறோம். அதுபோல் பகவான் யோகிராம்சுரத்குமார் ஜெயந்தியும், சிவகாசி பஜனாஸ்ரமத்தில் 10 நாட்கள் பண்டிகையாக கொண்டாடப்பட வேண்டும் என்று பூஜ்ய ஸ்ரீஸ்ரீமுரளீதரஸ்வாமிஜி வழிகாட்டியுள்ளார். 10 நாட்களும் பலவகையான ஆன்மீகநிகழ்ச்சிகள் நடைபெற வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். டிசம்பர் 6ம் தேதி நிகழ்ச்சியாக வணக்கத்திற்குரிய திரு. பெருமாள் ராசு ஐயா அவர்களுடைய நிகழ்ச்சியின் போது இந்நூல் வெளியிடப்படுகிறது. திரு. சந்திரப்பிரகாசம் அவர்கள் சிவகாசியில் முதன்முதலில் சாமிக்கு ஜெயந்திவிழா கொண்டாடிய, வணக்கத்திற்குரிய திரு. ராஜதுரைநாடாரின் அருமைப்புதல்வர். இன்றுவரை தந்தையாரின் பணியைத் தொடர்ந்து செய்து வருகிறார். திரு. பெருமாள்ராசு ஐயா அவர்கள் சாமிக்கு மிகவும் நெருக்கமான பக்தர். சாமியின் மீது அதி அற்புதமான பாடல்கள் பல இயற்றியுள்ளார். ஒருமுறை ஐயா அவர்கள் திருப்பதி செல்லுமுன் சாமியிடம் உத்தரவு பெற வந்திருந்தார். சாமி அவரிடம் 10 காசு கொடுத்து, இதைத் திருப்பதி உண்டியலில் போட்டுவிட்டு, திருவண்ணாமலையில் இருக்கும் பிச்சைக்காரன் யார் என்று கேட்க வேண்டும் என்றார்கள். ஐயாவும் திருப்பதி சென்று, உண்டியலில் காசை போட்டுவிட்டு, ஏழுமலையானிடம் திருவண்ணாமலையில் இருக்கும் சாமி யார் என்று கேட்க, அசரீரியாக நேனுதா (நானே தான், verily myself) என்ற பதில் வந்தது. இந்நூலை திரு. சந்திரப்பிரகாசம் வெளியிடுவதும், திரு. பெருமாள்ராசு ஐயா முதல் பிரதியைப்

பெற்றுக்கொள்வதும், நம் பகவான் யோகிராம்சுரத்குமார் அவர்களுக்கு மிகவும் உகந்ததான செயல்.

பகவானைப் பற்றி அனைவரும் அறிந்துகொள்ள வேண்டும். உன் குடும்பத்தினரோடு அவர் பழகியதை நூலாக வெளியிட வேண்டும் என்று பரம பூஜ்ய ஸ்ரீஸ்ரீ முரளீதரஸ்வாமிஜி கூறியதை சிரமேல் கொண்டு, சாமியே ஆணையிட்டதாகக் கருதி, இந்நூலை எழுதலானேன். சாமியோடு பழகிய அநுபவங்களை எழுத எழுத, சாமியுடனேயே இருக்கும் ஆனந்தம் ஏற்பட்டது. இந்த பிச்சைக்காரனோடு நீங்கள் பழகியதை மறுபடியும் நினைத்துப்பார்ப்பீர்களேயானால், அது யுகயுகமாகத் தவம் செய்வதற்குச் சமம் என்று சாமியே சொல்லியிருக்கிறார்.

எல்லாமாகிய பரம்பொருள் பகவான் யோகிராம்சுரத்குமாராக இந்நிலவுலகில் அவதாரம் செய்து, தன் அளப்பரும் கருணையினால் நம்மையெல்லாம் ஆட்கொண்டார். அப்பரம்பொருளின் பாதாரவிந்தங்களுக்கு அநந்த கோடி நமஸ்காரம்.

இந்த நூலை எழுதுமாறு தூண்டி, சாமியின் நினைவுகளில் மூழ்கும் படியான பாக்கியத்தைக் கொடுத்த, பரமபூஜ்ய ஸ்ரீஸ்ரீ முரளீதரஸ்வாமிஜியின் பாதாரவிந்தங்களுக்கு அநந்தகோடி நமஸ்காரம்.

இந்நூலை வெளியிட் ஒப்புக்கொண்ட திரு. ராஜதுரைநாடாரின் தவப்புதல்வர் திரு. சந்திரப்பிரகாசம் அவர்களுக்கும், முதல்பிரதியைப் பெற்றுக்கொள்ளும் சிந்தனை கவிஞர். திரு. பெருமாள்ராசு ஐயா அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி.

குமாரவேலு சென்னையில் படித்துக் கொண்டிருந்த சமயம், காமிராவுடன் சாமிதரிசனத்திற்கு சென்ற போது, சாமியே அவனை தேரடி மண்டபத்தில் இந்த இடத்தில் நின்று படம் பிடித்தால் இந்த பிச்சைக்காரன், கோபுரம்,

மலை எல்லாம் ஒன்றாக வரும் என்று கூறி வழிகாட்டியபடி எடுத்த புகைப்படம் இந்நூலின் முன் அட்டையை அலங்கரிக்கிறது. இந்நூலை குறுகிய காலத்திற்குள் சிரத்தையுடன் அருமையாக அச்சிட்டுக் கொடுத்த ராஜ்திலக் பிரிண்டர்ஸ் திரு. குமாரவேலுக்கு பகவான் யோகிராம்சுரத்குமாரின் பரிபூரண நல்லாசி கிட்டவேண்டுமென்று, சாமியின் திருவடிகளைப் பிரார்த்திக்கிறேன்.

சாமியுடன் நடந்த நிகழ்வுகளை மிகைப்படுத்தியோ, குறைத்தோ எழுதாமல், சாமியின் திருவருளால் நடந்தது நடந்தபடியே எழுதியுள்ளேன். அனைத்தும் அவர் நிகழ்த்திய அன்பு லீலைகளே. அவை படிப்போருக்கு ஆனந்தத்தை தருமேயானால், அதுவும் சாமியின் திருவருளே.

திலகவதி ராஜசேகர்



## வாழ்த்து மடல்

ஆதியும் அந்தமும் இல்லாத அருட்பெருஞ்ஜோதி
பாதி மதி நதி சூடிய பரமாத்மா
திருவிளையாடலை படிக்க பணித்தது உன்தன்னை!

திருவிளையாடல் புரிந்தால்தான் நான் ஆடும்
குரு விளையாடல் புரியும் உன்தனக்கு என்பதனை
சொல்லாமல் சொல்லும் தெய்வம் சொல்லிற்றோ!

சொக்கவைக்கும் சொக்கதங்கம் நம் சொக்கநாதன்
சித்தராய் வந்தது எல்லாம் அறுபத்துநான்குக்காகவே
ஆறும்நாலும் தனில் ஒருவருக்கென வந்தானோ சுந்தரேசன்!

வளையல் வளையல் என்று கேட்டுகேட்டு
குலுங்கி குலுங்கி சிரித்து சிரித்து
மாய வலை அறுத்த செட்டி கெட்டிதான்!

ராஜசேகரனை திருவதிகையில் பூஜை செய்து
இன்று லம்போதரனையும், குமரவேலையும் ஈன்றெடுத்த
மாதர்குலமாணிக்கம் திலகவதி பணி சிறக்கட்டும்.

- மஹாரண்யம் ஸ்ரீஸ்ரீ முரளீதர ஸ்வாமிஜி.

மதுரபுரி ஆஸ்ரமம்
*01-12-2009.*

யோகிராம்சுரத்குமார யோகிராம்சுரத்குமார்
யோகிராம்சுரத்குமார ஜெயகுருராயா

## என் குடும்பச் சூழல்

பகவான் யோகிராம்சுரத்குமாரின் பரம கருணையினால் உத்தமமான தாய்தந்தையரான செண்பகம்மாள் ஞானகிரிநாடாருக்கு மகளாகப்பிறக்கும் பெரும் பாக்கியம் கிடைத்தது. அம்மாவின் பிறந்த ஊரான தூத்துக்குடியில், 1942ம் ஆண்டு ஜனவரி 10ம் தேதி பிறந்தேன். அப்பா சிவகாசியில் பெரிய தொழிலதிபர். தொழிலதிபர் என்று சொல்வதை விட அன்பே வடிவான அருளாளர் அவர். சிவகாசி நகர்மன்றத்தலைவராக இருந்திருக்கிறார். அம்மா சிறந்த சிவபக்தை. சிவகாசி சிவன் கோவிலில் வாரவழிபாட்டுச்சங்கம், சிறுவர் சங்கம் ஆரம்பித்து, தேவார திருவாசகப் பதிகங்களை, ஓதுவாமூர்த்திகள் மூலமாக, பெண்களுக்கும், சிறுவர்களுக்கும் கற்றுத் தந்தவர். எனது மூத்த அண்ணன் தர்மராஜா. இளைய அண்ணன் ஞானகிரிகணேசன். இரண்டு ஆண் குழந்தைகளுக்குப் பின், ஏழு வருடங்கள் கழித்து மூன்றாவது பெண் குழந்தையாக பிறந்ததால், அப்பாவுக்கு நான் செல்லக்குழந்தை. எனது முதல் தங்கை உமாதேவி. எங்கள் வீட்டின் கடைக்குட்டி சாரதாமணி. ஐந்தாம் வகுப்பு வரை சிவகாசி இந்து நாடார் பெண்கள் பள்ளியில் படித்தேன். அச்சமயம் சிவகாசியில் பெண்களுக்கான உயர்நிலைப்பள்ளி இல்லாததால், தூத்துக்குடியில் சுப்பையா வித்யாலயத்தில் ஆறாம் வகுப்பிலிருந்து ஒன்பதாம் வகுப்பு வரை படித்தேன். சிவகாசியில் பெண்கள் உயர்நிலைப்பள்ளி வந்த பின், பத்தாம் வகுப்பும், S.S.L.C.யும் சிவகாசியில் படித்தேன். சென்னை ராணிமேரிகல்லூரியில் தமிழில் இளங்கலைப் பட்டம் பெற்றவுடன், 1962ம் ஆண்டு ராஜசேகர்ஜியுடன் எனக்குத் திருமணம் நடந்தது. ராஜசேகர்ஜிக்கு பூர்வீகம் சிவகாசி என்ற போதிலும், மதுரையில் பல்மருத்துவராகத்

தொழில்புரிந்து வந்தார். ஆகவே மதுரையில் குடியேறினோம். 1963ம் ஆண்டு டிசம்பர் 3ம் தேதி லம்போதரனும், 1966ம் ஆண்டு ஏப்ரல் 26ம் தேதி குமாரவேலுவும் பிறந்தார்கள். இருவரும் பள்ளிப்படிப்பை மதுரையிலேயே முடித்தார்கள். பள்ளி விடுமுறை ஆரம்பித்தவுடன் உமா குழந்தைகள் எங்கள் வீட்டிற்கு வந்து விடுவார்கள். ஐந்து குழந்தைகளும் ஒற்றுமையுடன் ஆடிப்பாடிக் களிப்பார்கள். பின் ஐவருமாக சாரதா வீட்டிற்கு திருநெல்வேலி செல்வார்கள். நாங்கள் மூன்று சகோதரிகள் மட்டுமன்றி, குழந்தைகளும் மிகவும் ஒற்றுமையாக இருந்த காலகட்டத்தில்தான் அண்ணாமலை செல்லும் சூழ்நிலை உருவாகியது.



## அருளைப் பொழிந்து ஆட்கொண்ட லீலை

பகவான் யோகிராம்சுரத்குமார் அவர்களின் அளப்பரும் கருணையினால், 1975 ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 23 ம் தேதி ஒரு ஞாயிற்றுக்கிழமையன்று, அவரை தரிசனம் செய்யக்கூடிய பாக்கியம் கிடைத்தது. பக்தி என்றால் என்னவென்றே தெரியாத எங்கள்மீது அன்பைப் பொழிந்து, தன்பால் ஈர்த்து, ப்ரேமை கொள்ள வைத்த மாயாஜாலத்தை எப்படி எழுதுவது என்றே தெரியவில்லை.

என் தங்கை சாரதாவுக்கு குடும்பத்தில் ஒரு பிரச்னை. அது எங்கள் அனைவரையும் வெகுவாக பாதித்துவிட்டது. அதிலிருந்து எப்படி மீள்வது என்பதும் தெரியவில்லை. என் தங்கை உமாசுரேந்திரனின் சின்னமாமனார் வணக்கத்திற்குரிய திரு. ராஜமாணிக்கநாடார் அவர்கள். குருசேவைக்கென்றே பிறந்த மாமனிதர் அவர். சத்குரு ஞானானந்தசாமிகளிடம் அவர் கொண்டிருந்த பக்திக்கு, ஈடு, இணை கிடையாது. அதே போன்று ஞானானந்த சாமிகளால் சுட்டிக்காட்டப்பட்ட பகவான் யோகிராம்சுரத்குமார், கன்னியாகுமரி மாயம்மா, கசவனம்பட்டி சாமி, மாயம்மா சுட்டிக்காட்டிய நயினார்சாமி ஆகிய அனைவரிடமும் மிகுந்த பக்தி கொண்டிருந்தார். தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பதற்கேற்ப, தனக்குத் தெரிந்தவர்களையெல்லாம் மகான்களின் தரிசனத்திற்கு அனுப்பி வைத்தவர். 2 ஆண்டுகள் தமிழகம் முழுவதும் சுற்றுப்பயணம் செய்து, இம்மகான்களின் பெருமையை எடுத்துரைத்தவர். அவர்களிடம் இது பற்றி உமா கூற, "கவலையை விடுங்கள். திருக்கோவிலூர் சென்று சத்குரு ஞானானந்த கிரியின் தபோவனத்தில் பாத பூஜை செய்யுங்கள். அப்படியே திருவண்ணாமலை சென்று ராம்ஜியையும் பாருங்கள். எல்லாம் சரியாகிவிடும்" என்றார். 3 சகோதரிகளும் குடும்பத்தோடு திருக்கோவிலூர் செல்வது என்று முடிவாகியது. ஆனால் ராம்ஜி யாரென்றும்

தெரியாது, எங்கு இருப்பார் எப்படி இருப்பார் என்றும் தெரியாது. திருவண்ணாமலை மலைமேல் இருப்பார் என்றார்கள். கோயிலருகிலுள்ள பாத்திரக்கடை வாசலில் இருப்பார் என்றார்கள். ரயில்வே ஸ்டேஷன் அருகே புன்னைமரத்தடியில் இருப்பார் என்றார்கள். அவரைப்பற்றி எந்த விபரங்களும் நாங்கள் அறிந்து கொள்ளவில்லை. நாங்களாக கற்பனை செய்து கொண்டோம். பூஜை புனஸ்காரங்கள் செய்வார் போலும். ஏதாவது பரிகார பூஜை செய்யச் சொல்வார் என்று எண்ணிக்கொண்டோம். என் தங்கை, அவள் கணவர் பிறந்த தேதி, திருமணநாள், குழந்தைகள் பிறந்த நாள் என்று குறித்துக்கொண்டு சென்றோம்.

1975ம் ஆண்டு, பிப்ரவரி 22ம் தேதி மதுரையில் எங்கள் வீட்டில் மதியச்சாப்பாட்டை முடித்துக் கொண்டு புறப்பட்டோம். ராஜசேகர்ஜி, நான், எங்கள் பிள்ளைகள் லம்போதரன், குமாரவேல், என்தங்கை உமா, அவள் கணவர் சுரேந்திரன், குழந்தைகள் சுஜாதா, பாலச்சந்திரன், மீனாக்ஷி, தங்கை சாரதா, குழந்தைகள் சந்தான கோபால கிருஷ்ணன், அங்கயற்கண்ணி, என்று 12 பேர் ஒரே காரில் புறப்பட்டோம். மாலை திருச்சியடைந்து, மலைக்கோவில் அடிவாரத்தில் இருக்கும் பிள்ளையாருக்கு மாலை அணிவித்து, அவரை வணங்கி உத்தரவு வாங்கிக்கொண்டு, தபோவனத்தில் பாதபூஜைக்கு வேண்டிய பூ வாங்கிக் கொண்டு திருக்கோயிலூர் நோக்கிப் பயணமானோம். திருக்கோயிலூர் சென்றடைய இரவு 8 மணிக்கு மேலாகியது. அங்கு பஸ்ஸ்டாண்டிற்கு எதிரிலுள்ள உடுப்பி ஹோட்டலில் இரவு உணவு சாப்பிட்டுவிட்டுத் தபோவனம் அடைந்தோம். ஏற்கனவே சொல்லியிருந்த படியால் தங்குவதற்கு அறை ஒதுக்கியிருந்தார்கள்.

மறுநாள் அதிகாலையிலேயே எழுந்து குளித்து முடித்துவிட்டு சிரத்தையுடன் பாதபூஜை செய்தோம். பாலுசாமி எங்களுக்கெல்லாம் குங்குமப்பிரசாதம் கொடுத்து,

"ஜெயம் ஜெயம்" என்று சொன்னார். மனதிற்கு ஆறுதலாக இருந்தது. உமாவின் மாமனாரும் மாமியாரும் ஏற்கெனவே தபோவனம் வந்திருந்தார்கள். உமாவின் மாமியார் திருமதி. உண்ணாமலைத்தாயம்மாள் ஞானானந்த சாமிகளின் தீவிர பக்தை. அவர்கள் தபோவனத்தின் ஒவ்வொரு இடமாகக் கூட்டிச் சென்று காட்டினார்கள். இங்கு தான் சாமி உட்கார்ந்திருப்பார். இங்கு தான் பக்தர்களோடு உரையாடுவார் என்று மிகவும் உற்சாகமாகக் கூறிக்கொண்டு வந்தார்கள். அவர்கள் ஏற்கனவே ராம்ஜி சாமியைத் தரிசித்திருந்தபடியால், அவரை அடையாளம் காட்டுவதற்காக எங்களுடன் திருவண்ணாமலை வந்தார்கள். உமா மாமனார் மாமியாரைச் சேர்த்து 14 பேர் ஒரே காரில் புறப்பட்டோம். காரில் வரும் போதே உண்ணாமலை அத்தை ராம்ஜியைப்பற்றியும், அவர் கையில் விசிறி கொட்டாங்கச்சி வைத்திருப்பதைப் பற்றியும், ஞானானந்தரும், அவரும் எப்படி சம்பாஷித்துக் கொள்வார்கள் என்பது பற்றியும் ஆர்வமுடன் சொல்லி வந்தார்கள். என் கணவர் ராஜசேகர்ஜி காரை ஓட்டி வந்தார். அவர் எதையும் திட்டமிட்டுச் செய்பவர். வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று பேசுபவர். காரில் போகும் போது அவர் சொன்னார் இப்போது மணி 9. 9½ க்கு திருவண்ணாமலையில் இருப்போம். ராம்ஜியிடம் ½ மணி. உடனே திரும்பி விட வேண்டும். தபோவனத்தில் பிரசாதம் சாப்பிட்டு விட்டு இருட்டுவதற்குள் மதுரைக்குச் சென்று விட வேண்டும்", என்றார்

திருவண்ணாமலை சென்றடைந்தோம். ஒரு மகானைப் பார்ப்பதற்கு எப்படிச் செல்ல வேண்டும் என்பதைக்கூட நாங்கள் அறிந்திருக்கவில்லை. வெறுங்கையுடன் சென்றிருந்தோம். உமாவின் மாமியார் அங்கிருந்த பாத்திரக்கடையில் ஒரு எவர்சில்வர் தாம்பாளம் வாங்கினார். பழக்கடையில் திராட்சை முதலான பழங்கள் வாங்கி, தாம்பாளத்தில் அடுக்கினார். ராம்ஜியைப் பார்க்க மலைமேல்

ஏறவேண்டியிருக்குமோ, ரயிலடிக்குச் செல்ல வேண்டியிருக்குமோ என்று எண்ணி வந்த எங்களுக்கு, அந்த கருணா மூர்த்தி, பக்தவத்சலன், பாத்திரக்கடை வாசலில் எங்களை எதிர்பார்த்து இருப்பது போல் ஏகாந்தமாய் தரிசனம் தந்தார். அன்று ஞாயிற்றுக்கிழமை. பாத்திரக்கடைகள் பூட்டப்பட்டிருந்தன. ஒரு பக்கம் நரிக்குறவர்கள் கூட்டமாய் அமர்ந்து ஆரவாரமாகப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தார்கள். இன்னொரு பக்கம் பெரியவர்கள் சிலர் சீட்டாடிக் கொண்டிருந்தார்கள். நாங்களனைவரும் சாமியை நமஸ்காரம் செய்து விட்டு கும்பலாக அமர்ந்தோம். ராஜசேகர்ஜி யாராவது அவரைக் கைகூப்பி வணங்கினால் கூட திருப்பி வணங்கத் தெரியாதவர், சாமியை சாஷ்டாங்கமாகக் கீழே விழுந்து வணங்கினார். சாமி தன் கண் அசைவினாலேயே எங்களை அவர்முன் அரைவட்டமாக, அனைவரையும் அவர் நன்றாகப் பார்க்கும் படியாக அமர வைத்தார். ராஜசேகர்ஜியை தனக்கு நேராக முன்னால் அமரும்படி சைகை செய்தார். அருளொழுகும் கண்களால் அனைவரையும் பார்த்துக்கொண்டேயிருந்தார். சுகமான மௌனம் அங்கு நிலவியது. சாமி ராஜசேகர்ஜியை தீர்க்கமாகப் பார்த்தார். ராஜசேகர்ஜியும் வைத்த கண் வாங்காமல் சாமியைப் பார்த்தபடியே அமர்ந்திருந்தார். ஏறக்குறைய அரைமணிநேரம் சென்றபின், "who are you my friends? what can this beggar do for you?" (என் நண்பர்களே! நீங்களெல்லாம் யார்? இந்த பிச்சைக்காரன் தங்களுக்காக என்ன செய்ய வேண்டும்?) என்றார்கள். ஆங்கில மொழி இவ்வளவு இனிமையானதா? அன்பைச் சுமந்து வந்த அந்த சங்கீதக்குரல் மனதைச் சொக்க வைத்தது. மனமெல்லாம் லேசாகி இனம்புரியாத அமைதி ஏற்பட்டது. ராஜசேகர்ஜி நாங்கள் வந்ததற்கான காரணத்தை எடுத்துச் சொன்னார். நீங்கள் அவசரமாகத் திரும்ப வேண்டுமா என்று சாமி கேட்டார். காரில் வரும் போது அரைமணிநேரம் தான் இருப்பேன் என்று கறாராகச் சொன்ன ராஜசேகர்ஜி, "இல்லை" என்று அழுத்தமாகக் கூறி, பிரச்னை

தீர வேண்டும் என்பதில் தான் அவசரப்படுகிறோம் என்றார். என்னை மாதிரி ஆட்களைப் பார்த்து உங்களுக்குப் பழக்கமில்லையா? (you are not used to seeing people like this beggar) என்றார். ராஜசேகர்ஜியும் ஆமாம் என்று ஒத்துக்கொண்டார். பிரச்னை என்னவென்பதைக் கேட்டபின், அது ஒரு பிரச்னையே இல்லை என்பது போல், so what? (அதனால் என்ன) என்று சொல்லிவிட்டார். எங்களுக்கெல்லாம் மனம் சோர்வடைந்துவிட்டது. இதைக் கேட்பதற்கா இவ்வளவு தூரம் வந்தோம் என்றாகி விட்டது. சிறிது நேரம் மௌனமாக எங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். பின் மிகவும் கனிந்த குரலில், நண்பர்களே, கடந்த ஆறுமாதகாலமாக எவ்வளவு வருத்தத்துடன் இருந்திருக்கிறீர்கள். சாரதா! நீ துளசி பூஜை செய்ய வேண்டும். நீ துளசியைச் சுற்றச் சுற்ற, உன் பிரச்னை ஒன்றுமில்லாமல் போய்விடும்" என்றார். எங்களை கைத்தல நிறைகனி என்ற திருப்புகழை திரும்பத் திரும்ப பாடும்படி கூறினார். பாடினோம். ஒவ்வொருவர் பெயரையும் கேட்டார். சாரதாவின் மகள் அங்கயற்கண்ணிக்கு அப்பொழுது ஒரு வயது. அவள் பெயரைக் கேட்டவுடன், "சாரதா, அவளுக்கு லக்ஷ்மிபாய் என்று பெயரிடு. உங்கள் வீட்டினர் யாரும் இதற்கு எதிர்ப்பு தெரிவிக்கமாட்டார்களே. ஜான்சியின் ராணி லக்ஷ்மிபாய் மாதிரி இவளும் தன்னுடைய உரிமைகளுக்காகப் போராடுவாள். லக்ஷ்மிபாய் என்று பெயர் வைத்துவிடு" என்று திரும்ப திரும்ப சொன்னார்கள். மனமெல்லாம் லேசானது போல் இருந்தது. ஏதோ ஒரு மகத்தான சக்தி எங்கள் துன்பங்களையெல்லாம் களைந்து விட்டதைப்போல் இருந்தது. நேரம் போவதே தெரியவில்லை. யார் யார் எந்தெந்த ஊரிலிருந்து வந்திருக்கிறோம் என்று கேட்டபின், தூத்துக்குடி தமயந்தியைப் பார்ப்பீர்களா? தமயந்தியைப் பார்த்தால் இந்த பிச்சைக்காரனுக்கு டீக்கடையில் கடன் இருக்கிறது என்று சொல்லுங்கள் என்றார். பாக்யசாலியான திரு. சுரேந்திரன், சாமி அந்தக் கடனைக்கட்டுவதற்கு எனக்கு வாய்ப்பளிக்க வேண்டும் என்று வேண்டினார். பெருமாளு,

இந்த நண்பருடன் சென்று அந்த டீக்கடைக்காரருக்கு கொடுக்கவேண்டிய பணத்தை கொடுத்துவிட்டு வாருங்கள் என்றார். எங்களை மீண்டும் கைத்தலநிறைகனி திருப்புகழ் பாடச் சொன்னார். சுரேந்திரனும், திரு. பெருமாளும் டீக்கடையில் பணம் செலுத்திவிட்டு வந்தனர். என் மனம், திரு. சுரேந்திரன் அதிர்ஷ்டக்காரரர். சாமிக்காக டீக்கடையில் பணம் செலுத்தினாரே, நம் வீட்டுக்காரருக்கு அந்த பாக்கியம் கிட்டவில்லையே என்று ஏங்கியது. மறுபடியும் ஜான்சி கி ராணி லக்ஷ்மிபாய் தன் உரிமைகளுக்காகச் சண்டையிடுவாள் என்று கூறிக்கொண்டு இருந்தார். மீண்டும் திரு. பெருமாளை அழைத்து, வேறொரு டீக்கடையின் பெயரைச் சொல்லி, அங்கு ஏதும் பணம் கட்டவேண்டுமா என்று கேட்டார். திரு. பெருமாள் ஆம் என்று சொல்லவும், ராஜசேகர்ஜி சாமி எனக்கு அந்தப்பணத்தைக் கட்டுவதற்கு வாய்ப்பளிக்க வேண்டும் என்று கேட்டார். சாமியும், பெருமாளு இந்த நண்பரை அழைத்துச்சென்று டீக்கடைக்குரிய பணத்தை கட்டிவாருங்கள் என்று அனுப்பிவைத்தார். மறுபடியும் சாரதாவிடம் நீ கட்டாயம் துளசிபூஜை செய்ய வேண்டும். சாரதா பூஜை செய்வாள் என்று, இந்த பிச்சைக்காரன் துளசியிடம் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறான் என்றார். எங்களுக்கு ஒரே வியப்பாக இருந்தது. துளசி என்றால் ஏதோ பெருமாள் கோயிலில் பிரசாதமாகத் தருவார்கள், ஜலதோஷத்திற்கு கஷாயம் போட்டுக்குடித்தால் நல்லது என்று மட்டுமே அறிந்திருந்த எங்களுக்கு, சாமி துளசியிடம் சத்தியம் செய்து கொடுத்ததாகக் கூறியது, துளசியின் மீது பக்தி கலந்த மரியாதையை ஏற்படுத்தியது. எல்லாருக்கும் எலுமிச்சம்பழம் பிரசாதமாகக் கொடுத்தார்கள். காரை எங்கு நிறுத்தியிருக்கிறீர்கள் என்று கேட்டார்கள். இரண்டு தெருக்கள் தள்ளி நிறுத்தியிருந்தோம். எங்களுடன் கார் வரை வந்து, அனைவரையும் ஏறி அமரச் சொன்னார்கள். தெருவில் கீழே கிடந்த வைக்கோலை கையில் சிறிது எடுத்துக்கொண்டார்கள். வாயில் ஏதோ மந்திரத்தைக் கூறுவது போல் முணுமுணுத்துக் கொண்டே காரைச் சுற்றி

வந்தார்கள். அப்போது சாமியின் முகம் அருணஜோதியாக மாறியது. கைகளை உயர்த்தி ஆசிர்வாதம் செய்தபடி, நீங்கள் புறப்படலாம் என்றார்கள். எங்கள் மனதிலிருந்த பாரத்தையெல்லாம் அவரிடம் இறக்கிவைத்துவிட்டதைப் போல், உணர்ந்தோம். தபோவனத்தில் பிரசாதம் சாப்பிட்டுவிட்டு, உமாவின் மாமனார் மாமியாரை அங்கு இறக்கிவிட்டு விட்டு, மதுரைக்கு புறப்பட்டோம். ராஜசேகர்ஜியும் திரு. சுரேந்திரனும் மாறி மாறி கார் ஓட்ட, மனக்கவலை நீங்கி நாங்கள் சுகமாகத் தூங்க, மதுரை வந்து சேர்ந்தோம்.

சாமியைப் பற்றிய சிந்தனையில் நாட்கள் கழிந்தன. சாரதாவின் பிரச்சனையும் தீர்ந்த பாடில்லை. உமா ஒரு மண்டல காலத்திற்குள் மறுபடி சாமியிடம் சென்று வந்தால் எல்லாம் சரியாகி விடும் என்றாள். ஆனால் அவள் உடல்நலம் குன்றி படுத்துவிட்டாள். ராஜசேகர்ஜிக்கு ஏப்ரல் முதல்வாரம் சென்னையில் பல்மருத்துவக்கூட்டம் இருந்தது. நானும் அவரும் ரயிலில் சென்னை சென்று, கூட்டம் முடிந்தவுடன், திருவண்ணாமலைக்கு பஸ்ஸில் புறப்பட்டோம். மாலை 4 மணியளவில் அருணை அடைந்தோம். கோயிலருகில் உள்ள தேவஸ்தான விடுதியில் ரூம் போட்டுவிட்டு, அங்கிருந்த ரூம்பாயிடம் சாமியைப்பற்றி விசாரித்தோம். எதிரிலிருந்த தேரடி மண்டபத்தைச் சுட்டிக்காட்டி, 5 மணிக்குமேல் விசிறி சாமியார் அங்கு வருவார். வெள்ளைக்காரர்களெல்லாம் அவரைப் பார்க்க வருவார்கள் என்றார். நாங்கள் விடுதியின் பால்கனியிலிருந்து தேரடி மண்டபத்தையே பார்த்துக் கொண்டிருந்தோம். யாரையும் காணவில்லை. அந்தி சாயும் நேரம். அங்கு யாரோ நடப்பது போலிருந்தது. சாமிக்காக வாங்கி வந்த சிகரெட் பாக்கெட்டுகளுடன் தேரடி மண்டபத்திற்குச் சென்றோம். அதற்குள் நன்றாக இருட்டி விட்டது. பங்குனி மாதம் ஆன படியால் அந்த நேரத்திலும் மண்டபம் மிகவும் உஷ்ணமாக இருந்தது. படிக்கட்டு

ஏறியபின் அங்கு யாரோ படுத்திருப்பது போன்று தெரிந்தது. (அந்த உஷ்ணமான கல்தரையில் ஒன்றும் விரிக்காமல், வெறுந்தரையில் சாமி படுத்திருந்தார்கள்.) அந்த இருட்டில் யாரென்று கண்டுபிடிக்கமுடியாமல், இது ராம்ஜி இல்லை என்று கூறி ராஜசேகர்ஜி திரும்பினார். அதற்குள் சாமியே, தனது இனியகுரலில் நண்பர்களே நீங்கள் யார் என்று ஆங்கிலத்தில் கேட்டு எழுந்து உட்கார்ந்து கொண்டார். சாமி என்று தெரிந்துகொண்ட சந்தோஷத்தில் அவர் திருவடிகளில் விழுந்து வணங்கினோம். ராஜசேகர்ஜி சிகரெட்டை சமர்ப்பித்தார். நாங்கள் யார் என்று அடையாளம் தெரிந்து கொண்டு, எங்கிருந்து வருகிறீர்கள் என்று கேட்டார்கள். மதராஸிலிருந்து என்று சொன்னவுடன், மிகவும் சந்தோஷத்துடன், இந்த பிச்சைக்காரனை பார்ப்பதற்கென்றே மதராஸிலிருந்து வருகிறீர்களா? ராஜசேகர்ஜி! இந்த பிச்சைக்காரனை மிகவும் பிரபலமானவனாக ஆக்கி விட்டீர்கள் என்று முதுகில் தட்டிக்கொடுத்து சிரித்தார்கள். அதையே திரும்ப திரும்ப பலமுறை சொன்னார்கள். அதற்குள் ஒவ்வொருவராக வெளிநாட்டினர் வர ஆரம்பித்தனர். எல்லோரும் சாமியுடன் தேரடிமண்டபத்திற்குள் சென்று அமர்ந்தோம். மின்சாரம் இல்லாத அந்த இடத்தில் சில மெழுகுவர்த்திகளை ஏற்றி வைத்தனர். யாரும் எதுவும் பேசவில்லை. நிசப்தமான சூழ்நிலை நிலவியது. தூரத்தில் இருட்டில் அண்ணாமலையின் மங்கலான தோற்றம். அருகில் மெழுகுவர்த்தி வெளிச்சத்தில் சாமியின் தரிசனம். ஏதோ சொர்க்கலோகத்தில் இருப்பது போல் உணர்ந்தோம். இரவு மணி 9 ஆனது. கீழே பாத்திரக்கடைகளையெல்லாம் பூட்ட ஆரம்பித்தனர். சாமி விசிறி, கொட்டாங்கச்சி, மயிற்பீலிக்கட்டு ஆகியவைகளை கையில் ஏந்திக்கொண்டு காந்தி கி ஜெய்! மகாத்மா காந்தி கி ஜெய்! என்று கூறியபடி படிக்கட்டில் இறங்கலானார்கள். சாக்கு மூடைகளைச் சுமந்து கொண்டு தொண்டர்கள் தொடர, நாங்கள்

அனைவரும் சாமியின் பின்னால் இறங்கி வந்தோம். சாய்பாபா (சாமியின் நாய்) எங்களுடன் ஓடி வந்தது. பீட்டர் என்ற பக்தர் வேகமாகச் சென்று ஒரு சாண் அளவேயிருந்த ஒரு விளக்குமாற்றால் சாமி படுக்கும் மேடையைச் சுத்தப்படுத்தினார். பாத்திரக்கடையைப் பூட்டியபின், ஒரு இரண்டடி அகலத்திற்கு பாத்திரக்கடையின் முழுநீளத்திற்கு மேடை இருக்கும். கோணிப்பைகளை படுக்கைபோல் விரித்து வைத்தார். பீட்டரின் அமைதியான முகமும், அடக்கமான பணிவிடைகளையும் பார்த்த எனக்கு, ஏசு கிறிஸ்துவை தரிசிப்பது போல் இருந்தது. எல்லோரும் சாமியின் முன்னால் அமர்ந்தோம். வெளிநாட்டினர் 18 பேர் இருந்தனர். இங்கும் மெழுகுவர்த்தி ஏற்றி வைக்கப்பட்டது. யாரும் எதுவும் பேசவில்லை. கண்ணை மூடி அமைதியாக ஆனந்தமாக சாமியின் சந்நிதானத்தில் அமர்ந்திருந்தனர். திடீரென்று சாமி எழுந்தார். கொட்டாங்கச்சியைக் கையில் ஏந்திக்கொண்டு, யோகிராம்சுரத்குமார் யோகிராம்சுரத்குமார் என்று சொல்லியபடி எங்கள் அனைவரையும் சுற்றி வந்தார். எங்களைச் சுற்றிலும் ஏதோ ஒரு பாதுகாப்பு அரண் அமைப்பது போலிருந்தது. எந்த ஒரு சிந்தனையும் எழாமல் மனம் அமைதியாக இருந்தது. நள்ளிரவு 1½ மணியைத் தாண்டியவுடன், இந்த பிச்சைக்காரன் உங்களுக்கு விடைகொடுக்கிறான் நண்பர்களே என்றார்கள். அனைவரும் அமைதியாக கலைந்தார்கள். சாய்பாபா எங்களை விடுதிவரை கொண்டுவந்துவிட்டுத் திரும்பியது. மறுநாள் அதிகாலையில் பழையபடி சாமி தரிசனத்திற்குச் சென்றோம். பாத்திரக்கடைவாசலில் அமர்ந்திருந்தார்கள். எனக்கு ஒரு பெரிய பந்து பூச்சரம் கொடுத்தார்கள். சாமியின் முன்னால் ஒரு பழுத்த சுமங்கலி அமர்ந்திருந்தார். அவரைவிட்டு விட்டு நாம் மட்டும் பூச்சூட்டிக் கொள்வதா என்று எண்ணி, அவருக்கு கொடுப்பதற்காக பூச்சரத்தை அறுக்கமுயன்றபோது, அது உனக்கு மட்டும் தான் என்று

சாமி சொன்னார்கள். அப்படியே மொத்தப்பூவையும் தலையில் சூட்டிக்கொண்டேன். மகான்களிடம் அவர்கள் சொன்னதை மட்டுமே செய்ய வேண்டும் என்று உணர்ந்து கொண்டேன். நாங்கள் எப்பொழுது மதுரைக்கு புறப்பட வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்கள். பெருமாளு, இந்த நண்பர் ராஜசேகர்ஜிக்கு தெய்வக்குழந்தை - திருவண்ணாமலை என்ற புத்தகத்தைக் கொடுக்கலாமா என்று கேட்டார்கள். ஒரு புத்தகம் இருக்கிறது கொடுக்கலாம் சாமி என்றவுடன், அதை எடுத்துவரச் சொன்னார்கள். ஓம் என்ற ப்ரணவ மந்திரத்தை உச்சியில் எழுதி, மதுரை பல்மருத்துவர் டாக்டர். ராஜசேகரன் B.D.S க்கு, திருவண்ணாமலை பிச்சைக்காரன் வழங்கியது என்று எழுதி தன் பெயரையும் கையெழுத்திட்டுக் கொடுத்தார்கள். இந்த பிச்சைக்காரனின் அழகிய புகைப்படம் உள்ளே இருக்கிறது என்றார்கள். எங்களுக்கு அன்புடன் விடைகொடுத்து அனுப்பினார்கள். லாட்ஜில் அறையைக் காலி செய்துவிட்டு பஸ் ஸ்டாண்ட் வந்தோம். திருச்சி செல்லும் அரசு பஸ் புறப்படத்தயாராக நின்றது. காரில் செல்வதைவிட மிகவும் சௌகரியமாக அந்த பஸ்ஸில் திருச்சி வந்தோம். அங்கும் மதுரை பஸ் தயாராக இருந்தது. சுகமாக மதுரை வந்து சேர்ந்தோம். வந்தவுடன் தெய்வக்குழந்தை புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்து விட்டேன். படிக்கப் படிக்க ஒரே பிரம்மிப்பாக இருந்தது. எப்பேர்ப்பட்ட ஆன்மீக அருள் சுரங்கம் நம் முயற்சி சிறிதுமில்லாமல் நமக்கு கிடைத்திருக்கிறதே என்று மலைப்பாக இருந்தது. என்னையுமறியாமல் மனம் அண்ணாமலை வாழ் அற்புதத்தை நோக்கியே சென்றது.



ராஜ சேகர்ஜிக்கு வேலூரில் அடிக்கடி பல் மருத்துவமகாநாடு நடக்கும். வேலூர் போவதென்றால், திருவண்ணாமலையில் சாமியைத் தரிசனம் செய்தபின்னர்தான் செல்வார். வேலூர் மீட்டிங்கிற்கு போகும் வழியில் 1975ம் ஆண்டு டிசம்பர் 21ம் தேதி திருவண்ணாமலை சென்றார். காலை ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு, சாமிக்கும் டிபன் வாங்கிக் கொண்டு புன்னைமரத்தடி சென்றார். சாமி ஏற்கெனவே அங்கு வந்து வீற்றிருந்தார்கள். இவர் சென்றவுடன் வாருங்கள் ராஜசேகர்ஜி, நாம் இருவருமாகக் காலை உணவு அருந்துவோம் என்று சொல்லி தன் பக்கத்தில் அமரச் செய்தார். இருவருமாக இட்லியைச் சாப்பிட்டார்கள். அன்று ராஜசேகர்ஜிக்கு இரண்டுமுறை காலை உணவு கிடைத்தது. பின் தன்னை தரிசிக்க வந்தவர்களை சாமி விரைவாக விடைகொடுத்து அனுப்பி விட்டார்கள். தொண்டர்களையும் தொலைவில் நிற்கச் சொல்லி விட்டார்கள். ராஜசேகர்ஜி இந்தப்பிச்சைக்காரனுக்குப் படுக்க வேண்டும் போல் இருக்கிறது. வாருங்கள் நாமிருவரும் படுத்துக் கொள்வோம் என்று தானும் படுத்து ராஜசேகர்ஜியையும் படுக்கச் சொன்னார். இருவரும் எதிரும் புதிருமாகப் படுத்துக் கொண்டார்கள். "மதுரையில் இருக்கிறீர்களே, மீனாக்ஷி அம்மன் கோவிலுக்குச் செல்வதுண்டா?" "எப்பொழுதாவது போவோம் சாமி." "அங்கு சுந்தரேசப்பெருமான் 64 லீலைகள் நிகழ்த்தியிருக்கிறாரே, அந்த லீலைகளைப் பற்றித் தெரியுமா?" எல்லா லீலைகளும் தெரியாது சாமி. ஆனால் பிட்டுக்கு மண் சுமந்த லீலை பற்றி ஏதோ தெரியும். இவ்வாறு கேட்டுவிட்டு, மதுரையில் இருக்கிறீர்கள். திருவிளையாடல் புராணமும், சிலப்பதிகாரமும் அவசியம் படிக்கவேண்டும் என்றார்கள். "சாமி, எனக்கு செய்யுள் நடையில் தமிழை வாசித்துப் புரிந்து கொள்ள முடியாது. திலகவதியை வாசிக்கச் சொல்லி கேட்டுக் கொள்கிறேன்"

என்று சொல்ல, அப்படியே செய்யுங்கள் என்றார். ராஜசேகர்ஜி வேலூர் சென்று மதுரை திரும்பியபின் இவ்விஷயத்தைச் சொன்னார். எங்கள் வீட்டில் திருவிளையாடல்புராணம் புத்தகம் ஒன்று - ராஜசேகர்ஜியுடைய அப்பாவுடையது, மிகவும் பழையதாக, அட்டையெல்லாம் கிழிந்துபோய் இருந்தது. ஒருநாளும் நாங்கள் அதை எடுத்து படித்துப்பார்த்ததில்லை. ஒருமுறை எங்கள் அம்மா எங்கள் வீட்டிற்கு வந்தபோது, தன் நூல்நிலையத்திற்கு அந்த புத்தகத்தை எடுத்துக் கொள்ளலாமா என்று கேட்டார்கள். ராஜசேகர்ஜியிடம் அனுமதிபெற்று மிகவும் சந்தோஷத்துடன் அவர்களுக்குக் கொடுத்து விட்டேன். அவர்களும் அப்புத்தகத்திற்கு கெட்டியான அட்டைபோட்டு பத்திரமாக வைத்திருந்தார்கள். அவர்களுக்கு செய்யுள்மட்டும் உள்ள நூலை வாங்கிக் கொடுத்துவிட்டு, இந்த நூலை எடுத்து வந்துவிட்டேன். தினமும் இரவு படுக்கப்போகுமுன், அந்நூலில் செய்யுளை வாசித்துவிட்டு, பொருளையும் படித்துவிட்டு, ராஜசேகர்ஜிக்கு சொல்வேன். சாமியின் கருணையால் தினமும் நிறையபாடல்களை உற்சாகத்துடன், சிரத்தையுடன் படிக்கும் பாக்கியம் கிடைத்தது. அடுத்தமுறை சாமியிடம் செல்வதற்குள் சிறப்புப்பாயிரம், கடவுள் வாழ்த்து, திருநாட்டுச்சிறப்பு, திருநகரச்சிறப்பு, திருக்கயிலாயச்சிறப்பு, புராணவரலாறு, தல விசேடப்படலம், தீர்த்த விசேடப்படலம், மூர்த்தி விசேடப்படலம், பதிகம் ஆகியவற்றைப் படித்துவிட்டு, முதல் இரண்டு லீலைகளையும் படித்து முடித்துவிட்டோம். அடுத்தமுறை சாமியை புன்னை மரத்தடியில் தரிசித்தபோது, மெதுவாக சாமி திருவிளையாடல் புராணத்தில் இரண்டு லீலைகள் படித்திருக்கிறோம் என்றேன். சாமி அடைந்த ஆனந்தத்தை அளவிட்டுச் சொல்லமுடியாது. இந்தப் பிச்சைக்காரன் எத்தனையோ பேருக்கு என்னென்னவோ சொல்லியிருக்கிறான். யாரும் கேட்பதில்லை. ஆனால் பித்துப்பிடித்த நிலையில் ஏதோ சொல்லியதை

வேதவாக்காக எடுத்துக் கொண்டு ராஜசேகர்ஜியும் திலகவதியும் படித்திருக்கிறார்களே என்று சந்தோஷப்பட்டார். சாமி எங்களிடம் ஆங்கிலத்தில் தான் பேசுவார்கள். ஆங்கிலம் சரளமாகப் பேச வரவில்லையே என்ற தயக்கம் சிறிதுமின்றி, எனக்குத் தெரிந்த ஆங்கிலத்தில் அவருடன் உரையாடுவேன். அந்த லீலைகள் இரண்டையும் இந்தப் பிச்சைக் காரனுக்கு சொல் என்றார்கள். நான் தட்டுத் தடுமாறியபடி ஆங்கிலத்தில் சொன்னதை, ஏதோ பண்டிதரிடம் கதைகேட்கும் பாவனையில் ரசித்துக் கேட்டார்கள். எவ்வளவு அழகாகச் சொல்கிறாய் திலகவதி என்று ஆசிமழை பொழிந்தார்கள். ஒவ்வொரு முறையும் தரிசனத்திற்குச் செல்லும்போது அதுவரை படித்தலீலைகளைச் சொல்லச் சொல்வார்கள். சாமியின் திருமுன்பு பாத்திரக்கடை வாசல், புன்னைமரத்தடி, சுப்பையாமடம், சந்நிதித்தெரு வீடு எல்லா இடங்களிலும் அடுத்த லீலையைப் படித்துச் சொல்லியிருக்கிறேன். பாத்திரக்கடை வாசலில் கால்மாறி ஆடியபடலம் சொன்னேன். ராஜசேகர பாண்டியனுடைய வேண்டுகோளுக்கிணங்கி. இடது காலை ஊன்றி வலது காலை எடுத்துவீசி கால்மாறி ஆடினார் என்று கூறியவுடன், oh! sundareswara dances to the tune of Rajasekarji' (ராஜசேகர்ஜியுடைய பாட்டுக்கேற்ப சுந்தரேசப் பெருமான் நடனமாடுகிறார்) என்று குறும்பாகக் கூறினார்கள். முதன் முதலாக நாம் சந்தித்தபோது, ராஜசேகர்ஜியிடம் இந்தப்பிச்சைக்காரன் போன்றவர்களைப் பார்த்து உங்களுக்குப் பழக்கமில்லையா என்று கேட்டேன். அவரும் மறுக்காமல் உடனே ஒத்துக் கொண்டார். ஆனால் இப்பொழுது நாங்கள் இருவரும் எவ்வளவு நெருக்கமாகிவிட்டோம் என்றார்.

சுப்பையா மடத்தில் அ.சா. ஐயாவின் மணிவிழா நடந்தது. அன்பர்கள் அனைரும் கூடினார்கள். அப்போதெல்லாம் நான் ஒருபக்கமும், உமா ஒருபக்கமுமாக சாமி அருகில் அமர்ந்திருப்போம். ஒருமுறை என்னை

சிகரெட் பற்றவைக்கச் சொன்னால் மறுமுறை உமாவைப் பற்றவைக்கச் சொல்வார்கள். அன்று எங்கள் சின்னண்ணி (பானுமதி ஞானகிரி கணேசன்) சாமி அருகில் அமர்ந்திருந்தார்கள். சாமி தனக்கு சமர்ப்பிக்கப்பட்ட பிரசாதங்களையெல்லாம் மிகவும் அன்புடன் அண்ணிக்குக் கொடுத்துக் கொண்டிருந்தார். இதைப் பார்த்து நானும் உமாவும் அண்ணி மிகவும் கொடுத்துவைத்தவர்கள் என்று பேசிக்கொண்டோம். இதை சாமி கவனித்துவிட்டார்கள். இந்த பிச்சைக்காரன் அனைவரையும் ஆசிர்வதிக்கும் வழிமுறை இது என்றுகூறி, பரபரப்புடன் எங்கள் இருவருக்கும் புஷ்பம் கொடுத்தார்கள். உடனே தலையில் சூடிக் கொண்டோம். மறுநாள் அதிகாலை 4 மணி இருக்கும், மின்சாரம் இல்லை மெழுகுவர்த்தி வெளிச்சத்தில் சாமியின் திருமுன் அமர்ந்திருந்தோம். சாமி From today onwards the name Uma and Tilakavathi going to be dear and near to this beggar. No one should question about this Even Gnanagiri Ganesa should not question about this"இன்றிலிருந்து உமா, திலகவதி என்ற பெயர் இந்த பிச்சைக்காரனுக்கு அன்பானதாகவும் நெருங்கியதாகவும் ஆகிறது. இதுபற்றி யாரும் கேள்விகள் எழுப்பக்கூடாது. ஞானகிரி கணேசன் கூட கேட்கக் கூடாது," என்று சொல்லிக்கொண்டேயிருந்தார்கள்.

தூத்துக்குடி முருகேஷ்ஜி தன் ராஜா என்று கூறுவார். அவர் பெயரைக் கேட்டால் கூட சாமி நெகிழ்ந்துவிடுவார். முருகேஷ்ஜி சாமியிடம் வந்தால் உமாவும் திலகவதியும் 24 மணிநேரமும் இந்தபிச்சைக்காரன் நினைவிலேயே இருக்கிறார்கள் என்பார். ஒரு நாள் திடீரென்று முருகேஷ்ஜி மதுரைக்கு எங்கள் வீட்டிற்கு வந்தார். சிவகாசி சென்று உமாவீட்டிற்கும் போனார். தூத்துக்குடி திரும்பியதும் சாமிக்குக் கடிதம் எழுதினார். "நீர்தான் உமா திலகவதி என்று கொண்டாடிக் கொண்டு இருக்கிறீர். அவர்கள் ஒன்றும் என்னைவிட மேலான நிலையில் இல்லை,"

முருகேஷ்ஜிக்கு சாமியிடம் அப்படிப்பட்ட ஈடுபாடு. 1977 ஜனவரியில் பொங்கலை ஒட்டி எங்கள் குடும்பமும் உமாவின் குடும்பமும் சென்னை சென்றிருந்தோம். அங்கிருந்து எங்கள் காரில் ராஜசேகர்ஜி, நான், உமாமட்டும் திருவண்ணாமலை சென்றாம். சென்னையில் கிரிக்கெட் மாட்ச் நடந்ததால் குழந்தைகளும் சுரேந்திரனும் அங்கேயே தங்கிவிட்டார்கள். நாங்கள் மதியம் புன்னைமரத்தடி சென்றடைந்தோம். அங்கு ஏற்கெனவே முருகேஷ்ஜி, ராஜகுமாரி அக்கா ராதிகா இருந்தார்கள். ராஜகுமாரி அக்கா பாடி, டேப் ரிகார்டரில் பதிவு செய்யப்பட்ட தூரன் பாடல்களைக் கேட்டுக் கொண்டிருந்தனர். எங்களைப் பார்த்துவுடன் முருகேஷ்ஜி "ஆமா, இவர்கள் இரண்டு பேரும் வந்து விட்டார்கள். இனி இந்தபிச்சைக்காரப் பயலுக்கு (சாமியிடம் மிகவும் உரிமை எடுத்துக்கொள்வார். அவரை யாராவது கண்டித்தாலும் சாமிக்குப் பிடிக்காது.) இந்த பாட்டுக்கூட இனிக்க ஆரம்பித்துவிடும்" என்று முணுமுணுத்தார். சாமியின் காதுகளில் விழுந்துவிட்டது. "ஆமாம் முருகேஷ்ஜி. உமாவும் திலகவதியும் வந்தவுடன் பாடல்கள் முன்பைவிட இனிமையாக ஒலிக்கின்றன" என்றார். சாமியை வணங்கி அவர்முன் அமர்ந்தோம். எங்கிருந்து வருகிறோம் என்பதைக் கேட்டறிந்தார்கள். என்னைப் பார்த்து, திலகவதி உனக்கு ஒன்று தெரியுமா. உன் குழந்தைகள் வாழ்க்கையில் ஜொலிப்பார்கள்," என்றார். புன்னைமர நிலத்துச் சொந்தக்காரரர் ஒரு பெரிய தூக்கு நிறைய கத்திரிக்காய் சாம்பார் ஊற்றிப் பிசைந்த சாதம் கொண்டு வந்து கொடுத்தார். சாமி எங்கள் மூவரையும் தன்னருகில் அமரச்சொன்னார். தூக்கில் இருந்த சாதத்தை தன் கைகளால் உருட்டி உருட்டி எங்கள் கைகளில் போட்டார். ராஜசேகர்ஜி கத்தரிக்காயே சாப்பிடமாட்டார். ஆனால் சாமி கொடுக்கும் பிரசாதமாயிற்றே. மூவருக்கும் மாறி மாறி கைகளில் அன்னமிட்டார். சாப்பிட்டு முடிந்தபின் சொம்பில் தண்ணீர் கொண்டு வந்து எங்கள் கைகளை அலம்பிவிட்டார். ஏசு கிறிஸ்து தன் சீடர்களின்

கைகளை இப்படித்தான் கழுவினராம் என்று சொல்லிக்கொண்டே கழுவினார்கள். உமா விக்கி விக்கி அழஆரம்பித்துவிட்டாள். 5 மணி ஆனதும் ராஜசேகர்ஜி காரில் சாமி ஏறிக்கொண்டார்கள். எல்லாருமாக நாடார் லாட்ஜ் சென்றடைந்தோம். எங்கள் ரூமில், தான் ஒரு கட்டிலில் அமர்ந்துகொண்டார்கள். அருகில் ராஜசேகர்ஜியை அமர்த்தி, அவர் கையை எடுத்து தன்மடியில் வைத்துக்கொண்டார்கள். முருகேஷ்ஜியை வெளியில் விட்டு ரூம் கதவைதாளிடச் சொன்னார்கள். உமா, ராஜகுமாரி அக்கா, ராதிகா மூவரையும் எதிர்த்தகட்டிலில் அமரச் சொன்னார்கள். இரண்டு கட்டில்களுக்கும் நடுவில் சுவரை ஒட்டி ஒரு நாற்காலியைத் தானே எடுத்து வந்து போட்டு,"திலகவதி அந்தகாலத்தில் மன்னர்களெல்லாம் என்னென்னவோ சிறப்புகள் செய்வார்கள். இந்த பிச்சைக்காரன் உனக்கு இந்த நாற்காலியைப் போடுகிறான். இதில் அமர்ந்து சுந்தரேசப் பெருமானது லீலைகளைக் கூறுவாய்" என்றார்கள். அதுவரை சாமிக்கு 31 லீலைகள் சொல்லி முடித்திருந்தேன். அடுத்த லீலையான வளையல் விற்ற லீலையைப் படிக்க ஆரம்பித்தேன். செய்யுளை வாசித்து பொருளைப் படித்து கதையைச் சொல்லச் சொல்ல, சாமி மிகவும் பரவசமானார்கள். சுந்தரரேசப்பெருமானுக்கும் ரிஷிபத்தினிகளுக்கு மிடையே நடந்த சம்பாஷணைகளைக் கேட்டு விழுந்து விழுந்து சிரிந்தார்கள். ராஜசேகர்ஜி முதுகில் படார் படாரென்று அடிவிழுந்தது. தனது முகத்தை கைகளால் மூடிக்கொண்டு ராஜசேகர்ஜி மடியில் விழுந்து சிரித்தார்கள். இந்த விளையாட்டு, லீலை முடியும்வரை தொடர்ந்தது. முருகேஷ்ஜி வெளியிலிருந்து ஜன்னல் வழியாக எட்டிப்பார்த்தார். ஜன்னல் கதவுகளையும் மூடச் சொல்லிவிட்டார்கள். லீலை கூறி முடித்தவுடன், என் ஆப்தன் கிருஷ்ணாஜி யமுனை நதிக்கரையில் நடத்திய லீலைகள் போன்று, சுந்தரேசப் பெருமான் வைகைநதிக் கரையில் நடத்தியுள்ளாரே. அற்புதம் இது அற்புதம்

என்றார்கள். சாமியின் முகமே அருணஜோதியாக மாறியது. இது எத்தனையாவது லீலை என்று கேட்டார்கள். 32வது லீலை என்று சொல்லவும், 64 லீலைகளுக்கும் இதுவே நடுநாயகமாக உள்ளது. திலகவதி நீ திருவிளையாடற்புராணக் கதைகளை புத்தமாக வெளியிட வேண்டும். இப்போது இல்லை எதிர்காலத்தில் நம் நண்பர்களுக்கிடையே என்றார்கள். சாமி 1977 ஜனவரியில் சொன்னது, 2008 ஜீலை 11ம் தேதி, ஆஸ்ரம வளாகத்தில் பூஜ்யஸ்ரீஸ்ரீ முரளிதர ஸ்வாமிஜியின் திருக்கரங்களால் திருவிளையாடற்புராண நூல் வெளியிடப்பட்டு, நிறைவேறியது.

அதற்குப் பின் ஓரிரு மாதங்களில் சாமி சந்நிதித் தெரு இல்லத்தில் குடியேறினார்கள். அப்போது திருவண்ணாமலை சென்றால் நாங்களும் சாமியுடன் சந்நிதித் தெரு இல்லத்திலேயே தங்கிவிடுவோம். அங்கு செல்லும் போதெல்லாம் மீதியுள்ள 32 லீலைகளையும் சொல்லி முடித்தேன். 64 லீலைகளும் சொல்லி முடித்தபின் அடுத்து என்ன செய்யப்போகிறாய் என்று கேட்டார்கள். நீங்கள் ராஜசேகர்ஜியிடம் முன்னர் கூறியபடி சிலப்பதிகாரம் படிப்பேன் என்றேன். தேவையில்லை சுந்தரேஸ்வராவின் லீலைகளுக்கு முடிவே கிடையாது. நீ திருவிளையாடற்புராணத்தையே மீண்டும் மீண்டும் படி. உனக்கு உண்ணும் உணவும் உயிர் மூச்சும் எல்லாமும் திருவிளையாடற்புராணமே. உனக்கு மூச்சுஅடக்கல் போன்ற எந்தவிதமான பயிற்சியும் தேவையில்லை. உனக்கு அருள்மழை பொழிவதற்கு சுந்தரேஸ்வரா உன் வீட்டு வாசற்படியில் காத்துக்கொண்டிருக்கிறார் என்றார்கள். 64 லீலைகளையும் இரண்டிரண்டு வரிகளாகச் சுருக்கி சுந்தரேஸ்வரரைப் போற்றித் துதிக்கும் திருவிளையாடற் புராண போற்றிக் கலிவெண்பாவையும் பரஞ்சோதி-முனிவர் எழுதியுள்ளார். இது உங்களுக்கு பெரியசொத்து. தினந்தோறும் பாராயணம் செய்யவேண்டும். திலகவதி

கோயிலுக்குச் செல்லும்போது சுந்தரேசப் பெருமான் சந்நிதியில் இதைப்பாடவேண்டும் என்றார்கள். நாங்கள் அண்ணாமலை வரும்பொழுதெல்லாம், சந்நிதித் தெரு வீட்டிலும், ஆஸ்ரமத்திலும் என்னையும் ராஜசேகர்ஜியையும் சேர்ந்து பாடச் சொல்வார்கள். எந்த விதத் தகுதியும் இல்லாத எளியவளுக்கும் அருள் பொழிந்த அவரது திருவிளையாடலைப் புரிந்துகொள்ளவும் முடியுமா.



## பல் மருத்துவரிடம் பரிவுகாட்டியருளிய லீலை

சந்நிதித் தெரு இல்லத்திற்கு குடிபுகுவதற்கு முன் சிறிதுகாலம் சாமி உடல்நலம் குன்றியிருந்தார்கள். பெல் ஸ்டூடியோ அதிபர், சாமியைத் தன் வீட்டில் வைத்துக் கவனித்துக் கொள்ளும் பெரும் பாக்கியம் பெற்றார். அங்கு சென்று சாமியைத் தரிசனம் செய்தபோது, திரு. அய்யாச்சாமியின் துணைவியார் பல்வலியால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார்கள். சாமி ராஜசேகர்ஜியைப் பரிசோதிக்கச் சொன்னார்கள். ராஜசேகர்ஜியும் பார்த்துவிட்டு பல்வேர் கெட்டுப் போயிருப்பதால் பல்லை எடுத்து விடுவதுதான் நல்லது என்று சொன்னார். பல் எடுக்க வேண்டிய உபகரணங்களை எடுத்துக் கொண்டு மறுபடியும் இரண்டு வாரங்களுக்குள் அண்ணாமலை சென்றோம். எவ்வாறு இவ்வளவு குறுகியநாட்களுக்குள் வந்துவிட்டீர்கள் என்று சாமி கேட்டார்கள். உமா சாமியை உடனே பார்க்கவேண்டும் போலிருக்கிறது என்றாள். ஆகவே புறப்பட்டுவிட்டோம் என்றோம். Just like a mother comes running to her child, the great uma comes running to this beggar (ஒரு தாய் குழந்தையை நோக்கி ஓடிவருவது போல், சிறந்த உமா இந்தப்பிச்சைக்காரனிடம் ஓடிவருகிறாள்) என்று குரல் தழுதழுக்கக் கூறினார்கள். ராஜசேகர்ஜி திருமதி. அய்யாச்சாமிக்கு பல்எடுப்பதற்கான ஆயுதங்களை கொதிக்கப் போட்டு எடுத்து தயார் பண்ணினார். சாமியும் கையில் சிகரெட்டையும் தீப்பெட்டியையும் எடுத்துக் கொண்டு தயாரானார்கள். சாமி சிகரெட்டைக் கூட பற்றவைக்கவில்லை. அதற்குள் ராஜசேகர்ஜி எளிதாக பல்லை எடுத்துவிட்டார். ஓ அதற்குள் ராஜசேகர்ஜி எடுத்துவிட்டாரே. நோயாளியோ சிரித்துக் கொண்டு இருக்கிறாரே. ராஜசேகர்ஜி நீங்கள் இந்தியாவின் தலைசிறந்த பல்மருத்துவர்களுள் ஒருவர் என்று ஆசிர்வாதம் செய்தார்கள்.

சந்நிதித்தெரு இல்லத்திற்கு சென்ற பின், ஒருநாள்

ராஜசேகர்ஜியிடம் சாமி, சில வருடங்களுக்கு முன்னர் வெளிநாட்டு நண்பர் ஒருவர் இந்த பிச்சைக்காரனிடம் 500 ரூ கொடுத்து, செயற்கைப்பல் கட்டிக் கொள்ளச் சொன்னார். இந்த பிச்சைக்காரன் மறுத்துவிட்டான். ஆனால் ராஜசேகர்ஜி கட்டித்தருவதானால் இந்த பிச்சைக்காரன் கட்டிக்கொள்வான் என்றார்கள். ராஜசேகர்ஜிக்கு தனக்குக்கிடைத்த இந்த பாக்கியத்தை எண்ணி ஒரே சந்தோஷம். ஆகவே அடுத்தமுறை சென்றபோது செயற்கைப்பல் மாடலுக்கு அளவெடுக்க வேண்டிய மாவுப்பொருள், மற்ற உபகரணங்களுடன் சென்றோம். எங்களுடன் தங்கை உமாவின் குடும்பத்தினரும் வந்திருந்தார்கள். அங்கு ஏற்கெனவே திரு. ஜனார்தனன் வந்திருந்தார். சாமி தான் உட்காரும் இடத்திற்கு இடதுபக்கத்திலிருந்த அறைக்குள் என்னையும் ராஜசேகர்ஜியையும் அழைத்துச் சென்றார்கள். வெளியே உமாவிடம், தான் வெளியே வரும்வரை திருமதி. பிரேமா சிவசங்கரன் இயற்றிய 'தேடிவந்தேன் உன்பதமே ராம்சுரத்குமார்' என்ற பாடலை பாடிக்கொண்டு இருக்கும்படி சொன்னார். சாமியைத் தீண்டி செயற்கைப் பல்லுக்கான மாடலுக்கு அளவெடுக்கப் போகிறோம் என்ற உற்சாகத்தில் ராஜசேகர்ஜி இருந்தார். மாவைக் குழைத்து, டிரேயில் ஊற்றி சாமியின் வாயில் வைத்துதான் தாமதம், சாமிக்குக் குமட்டிக் கொண்டு வந்து வாந்தி எடுத்துவிட்டார். நான் வெளியே சென்று வாளியில் தண்ணீர் எடுத்துவந்து அறையைச் சுத்தப் படுத்தினேன். சாமி ஒருவழியாகத் தன்னை சுதாரித்துக் கொண்டு அடுத்த அளவு கொடுக்கத் தயாரானார். ராஜசேகர்ஜி மீண்டும் மாவைக்குழைத்து டிரேயில் ஊற்றிவாயில் வைத்துதான் தாமதம் சாமி மீண்டும் வாந்தி எடுத்துவிட்டார். நான் மீண்டும் வாளியில் தண்ணீர் கொண்டு வந்து அறையை சுத்தம் செய்தேன். இந்த லீலை 5 மணி நேரத்திற்கும் அதிகமாக நடந்தது. கடைசியில் ஒருவாறாக மாடலுக்கு அளவெடுத்துவிட்டு அறையை விட்டு வெளியே வந்தோம்.

அதுவரை சிறிதும் சளைக்காமல் உமா "தேடிவந்தேன் உன்பதமே" பாடலைத் திரும்பத் திரும்ப பாடிக்கொண்டே இருந்தாள். சாமி வெளியே வந்தவுடன் அவளிடம், உள்ளே நடந்தவேலை எவ்வளவு முக்கியம் வாய்ந்ததோ, அதேபோல் நீ வெளியே பாடிக்கொண்டிருந்ததுவும் முக்கியத்துவம் வாய்ந்தது என்றார்கள். மதுரை திரும்பியதும் ராஜசேகர்ஜி, மிகவும் சிரத்தையுடன் சாமிக்கு செயற்கைப்பல்செட் கட்டினார். செயற்கைப்பல்செட்டை எடுத்துக் கொண்டு அண்ணாமலை சென்றோம். சாமி பல்செட்டை மாட்டுவதற்குத் தயாரானார்கள். ராஜசேகர்ஜி, மிகுந்த கவனத்துடன் சாமிக்கு பல்செட்டைப் பொருத்தினார். சாமி ராஜசேகர்ஜியை அன்புடன் பார்த்து you have passed in the examination (நீங்கள் பரீட்சையில் வெற்றியடைந்து விட்டீர்கள்) என்றார்கள். இதை சொல்லிமுடித்தவுடன் பல்செட்டைக் கழற்றி விட்டார்கள். அதற்குப் பின்னர் சாமி பல்செட் அணிந்து நாங்கள் பார்த்தில்லை. தன் ஜிப்பா பாக்கெட்டிலிருந்து 100ரூ நோட்டை எடுத்துச்சுருட்டி, ராஜசேகர்ஜின் கையை எடுத்து தன் கையில் வைத்துக் கொண்டு கொடுத்தார்கள். இன்றுவரை ராஜசேகர்ஜி சாமியின் அருள்பிரசாதமாக சாமியின் வாய்மாடலையும், 100ரூயையும் தன் க்ளினிக்கில் போற்றிப்பாதுகாத்து வருகிறார்.



## கர்ப்பகிரகம் கண்டருளியலீலை

1975ம் ஆண்டு ஜீலை 5ம் தேதி மூன்று சகோதரிகள் குடும்பத்தினரும் திருவண்ணாமலை சென்றோம். சாரதாவின் கணவர் நடேஷ்ஜி முதன்முறையாக அன்றுதான் எங்களுடன் சாமி தரிசனத்திற்கு வந்திருந்தார். அவர் என் அம்மாவிற்கு தம்பி மகன். ஆகவே தன் அத்தையைப்பற்றி மிகவும் பெருமையாக சாமியிடம் கூறினார். 17 வயதில் திருமணமாகி தூத்துக்குடியிலிருந்து சிவகாசி வந்த செண்பகம்மாள், இந்துமாதர் பக்தசபை என்று பெண்களுக்காக சங்கம் ஆரம்பித்ததையும், வார வழிபாட்டுச் சங்கம் தொடங்கி சிவன்கோவிலில் ஓதுவார் மூலமாக தேவாரம், திருவாசகம் சொல்லிக் கொடுத்ததையும், சிறுவர் சங்கம் தொடங்கி சின்னஞ்சிறு சிறுவர்களுக்கு பக்திப் பாடல்களையும், பக்திகதைகளையும் சொல்லித்தருவதையும் கூறினார். அம்மாவுக்குத் திருக்குறளும், திருவாசகமும் முழுவதும் மனப்பாடமாகத் தெரியும். பெரியபுராணக்கதைகளை மிகவும் ரசித்துத்கூறுவார்கள். அடிக்கடி குழந்தைகளுக்கு தேவாரம், திருவாசகம் மனப்பாடம் செய்து ஒப்பிக்கும் போட்டி வைத்து, நல்ல புத்தகங்களைப் பரிசாகவழங்குவார். பலஆண்டுகளாக சிவபூஜை செய்து வருகிறார். இதைஎல்லாம் கேட்டுக்கொண்டிருந்த சாமி, நீங்களெல்லாம், ராஜமாணிக்க நாடாருக்காக இந்த பிச்சைக்காரன் உங்களுடன் தொடர்பு கொண்டதாக நினைக்கிறீர்கள். சம்பக் அம்மாவிற்காக இந்த பிச்சைக்காரன் உங்களுடன் இருக்கிறான் என்றார்கள்.

நாங்கள் மூன்று சகோதரிகளும் சந்தித்துக் கொண்டால் சாமியைப் பற்றியே பேசிக் கொண்டிருப்போம். வேறு பேச்சே இருக்காது. இதைப் பார்தத எங்கள் அம்மாவும் சாமியைத் தரிசிக்க ஆவல் கொண்டார்கள். 1975, செப்டம்பர் மாதக் கடைசியில் சாமியிடம் சென்றோம். அம்மாவும் உடன்வந்தார்கள். ராஜசேகர்ஜி மதுரை

அண்ணாநகரில் வீடுகட்டுவதற்காக இடம்வாங்கி, இன்ஜினியரிடம் வீட்டிற்கான ப்ளான் வரைந்து வாங்கிவந்தார். சாமி புன்னைமரத்தடியில் இருந்தார்கள். அம்மாவைப் பற்றி விசாரித்தார்கள். என்னைப் பாடச்சொன்னார்கள். "தலையே நீ வணங்காய்" என்ற திருநாவுக்கரசர் தேவாரம் பாடினேன். மீண்டும் ஒருமுறை பாடச்சொன்னார்கள். அம்மாவை பெரியபுராணம் கதை சொல்லச் சொன்னார்கள் அம்மா பூசலார் நாயனார் கதை சொல்ல ஆரம்பித்தார்கள். பல்லவமன்னன் காஞ்சிபுரத்தில் பிரம்மாண்டமாக கைலாசநாதர்கோவில் கட்டும் பொழுது, சிறந்த சிவபக்தரான பூசலார் தானும் எம்பெருமானுக்கு ஒரு கோயில்கட்டவேண்டும் என்று ஆசைப்பட்டு, வசதியில்லாத காரணத்தால், தன் மனத்திற்குள்ளேயே கோவிலைக் கட்டுவதற்கு ப்ளான் போட்டதைச் சொல்லும்போது, ராஜசேகர்ஜியும் வீடுகட்டுவதற்கு ப்ளான் போட்டு எடுத்து வந்திருப்பதைச் சொன்னார்கள். உடனே சாமி கதை சொல்லுவதை நிறுத்தச் சொல்லிவிட்டு, ராஜசேகர்ஜியிடம் வீட்டுப்ளானை வாங்கினார்கள் அதைத் தடவிக் கொண்டே இருந்தார்கள். திலகவதி அவளுக்காக வீடு கட்டவில்லை, இந்த பிச்சைக்காரனுக்கு கோயில் கட்டுகிறாள் என்று திரும்பத் திரும்ப கூறிக் கொண்டே இருந்தார்கள். ஒரேநாளில் பல திருமணங்கள் நடந்தால், ஒருவருக்கு தந்தி அடிப்போம். ஒருவருக்கு வாழ்த்துச் செய்தி அனுப்புவோம். ஒருவருக்கு தெரிந்தவர்களை அனுப்புவோம். ஆனால் நமக்கு மிகவும் வேண்டியவர்களுக்கு நாமே செல்வோம். அதுமாதிரி இந்த பிச்சைக்காரனுக்கு இது கர்ப்பகிரகம். திலகவதி இந்தபிச்சைக்காரனுக்கு கோயில் கட்டுகிறாள். அது "திலகவதி பவன்." ராஜசேகர்ஜி சங்கோஜப்படலாம். ஆனால் இந்த பிச்சைக்காரனுக்கு அது திலகவதி பவன்தான் என்று சொன்னார்கள். மணி 5 ஆனதும், பாத்திரக்கடைக்குச் சென்றோம். பாத்திரக்கடைகள் பூட்டி இருந்தபடியால் தேரடிமண்டபத்திற்குப் போகாமல்

பாத்திரக்கடை முன்புறமேடையிலேயே அமர்ந்தார்கள். திடீரென்று மேடைமீது எழுந்துநின்று, "சிவாய நம ஓம் நமசிவாய ஓம் நமசிவாய ஓம் நமசிவாய" என்று பாடிக்கொண்டு தாண்டவமாட ஆரம்பித்துவிட்டார்கள். அடிவயிற்றிலிருந்து குரலெடுத்துப் பாடிக்கொண்டு, பாத்திரக்கடை மேடை முழுதூரமும் சுமார் 2 அடிக்குமேல் எம்பி தாவி குதித்துக் கொண்டு, கைகளையும் வீசிக்கொண்டு ஆடினார்கள். சுமார் 1½ மணி நேரத்திற்கும் மேல் சிவதாண்டவம் நீடித்தது. வைத்த கண் வாங்காமல் பார்த்து லயித்திருந்தோம். பின்னர் திரு பெருமாள் சொன்னார், "முன்பு ஒரு முறை அண்ணாமலை மலைமேல் இவ்வாறு நடனமாடினார்கள். அதற்குப் பின்னர் இன்றுதான் இத்தாண்டவம் நடக்கிறது. சிவபக்தையான செண்பகம்மாளைப் பார்த்த ஆனந்தத்தினால் இருக்காலம்" என்றார்.

*1976*ம் ஆண்டு பிப்ரவரி *1*ம் தேதி வீடுகட்ட ஆரம்பிப்பதற்காக பூமிபூஜை செய்தோம். அதற்கு சாமி வாழ்த்துத்தந்தி அனுப்பியிருந்தார்கள். அஸ்திவாரம் கட்டிமுடித்தபின், மழையில் நனைந்து வெயிலில் காயட்டும் என்று ஒரு வருட இடைவெளி விட்டுவிட்டார்கள். அடுத்த ஆண்டு கட்டஆரம்பித்து லிண்டல் மட்டத்திற்கு வந்தவுடன், ராஜசேகர்ஜி, நான், லம்போதரன், குமாரவேலு நால்வரும், சாமியிடம் காட்டுவதற்காக கட்டிடத்தின் முன் நின்று, பல போட்டோக்கள் எடுத்துக் கொண்டோம் அடுத்தமுறை சாமியிடம் சென்றபோது அவற்றைக் கொண்டு சென்றிருந்தோம். அதில் ஒருபோட்டோவை எடுத்து வைத்திருப்பார்கள் போலும். நாங்கள் அதற்கடுத்தமுறை திருவண்ணாமலை சென்றபோது, தான் அமரும் இடத்தில் தலைக்குமேல் அந்த போட்டோவை ப்ரேம் பண்ணி மாட்டியிருந்தார். எங்களைப் பார்க்கிறார். போட்டோவைப் பார்க்கிறார் குறும்பாகச் சிரிக்கிறார்.

தெய்வக்குழந்தையின் திருவிளையாடல் எங்களைப் பரவசத்தில் ஆழ்த்தியது.

ராஜசேகர்ஜி வேலூர் செல்லும் வழியில் திருவண்ணாமலை சென்று, புன்னை மரத்தடியில் சாமியைத் தரிசனம் செய்தார்கள். புன்னைமரத்தைச் சுற்றியிருந்த தோட்டம் சாமந்திபூக்கள் (மெரிகோல்டு) பூத்துக் குலுங்க வண்ணமயமாகக் காட்சி அளித்தது. சாமி ராஜசேகர்ஜி கையிலிருந்த சூட்கேஸிலிருந்து எல்லா சாமான்களையும் எடுத்து வெளியே வைக்கச் சொன்னார்கள். பூக்களைப் பறித்து வரச்செய்து சூட்கேஸ் முழுவதும் நிரப்பி, அதைமூடி இதைத் திலகவதிக்கு எடுத்துச்செல் என்று சொல்லிவிட்டார்கள். ராஜசேகர்ஜி வேலூர் சென்று, அங்கு மீட்டிங்கிற்காக 2 நாள் தங்கிவிட்டு, 3ம் நாள் மதுரை வந்தார். சூட்கேஸைத் திறந்து பார்த்தால் அப்பொழுதுதான் செடியிலிருந்து பறித்ததுபோல் புத்தம்புதிதாகக் காட்சி அளித்தது. பூக்களைப் பறித்து சிறிது நேரம் ஆனாலே அவை துவண்டுவிடும். அதுவும் 3 நாட்கள் சூட்கேஸில் காற்றுப்புகாமல் அழுத்திமூடிவைத்தால் வெம்பி அழுகிவிடும். இது எப்படி சாத்தியம்? சாமியின் அருள்பிரசாதம் அல்லவா அதை அப்படியே எடுத்துச்சென்று புதிய கட்டிடத்தில் பூஜை அறையில் (தளத்துக்கு இன்னமும் கான்கிரீட் போடவில்லை) மணலைத் தோண்டி புதைத்து வந்தோம்.

மற்றொரு முறை வேலூர் செல்லும் வழியில், திருவண்ணாமலைக்கு தரிசனத்திற்குச் சென்றபோது, திருக்கோயிலுக்கு அழைத்துச்சென்றார். சந்நிதிக்குள் செல்லாமல் கோயில் தெப்பக்குளத்து படிக்கட்டில் தன் அருகே ராஜசேகர்ஜியை அமரவைத்துக் கொண்டார். அது நல்ல வெயில் காலம். சுட்டெரிக்கும் வெயிலில் கல்தளத்தில் அன்று பகல்பொழுது முழுவதும் இருவரும் அமர்ந்திருந்தார்கள். அவ்வப்போது கொட்டாங்கச்சியில் தெப்பத்து நீரை எடுத்து தான் பருகிவிட்டு

ராஜசேகர்ஜிக்கும் கொடுப்பார். பேச்சு எதுவும் கிடையாது. புன்முறுவலுடன் கைகளை வருடிக்கொடுத்தபடியே இருந்தார்கள். இன்னொருமுறை நாடார் லாட்ஜ் அருகிலுள்ள கோபுரத்தின் அருகே ஒரு பார்க்குக்கு அழைத்துச் சென்று பகல்பொழுது முழுவதும் இருவருமாக அங்கு அமர்ந்திருந்தார்கள். ஒரு பெண்மணி கொய்யாப்பழம் விற்றுக் கொண்டிருந்தாள். அவளிடம் பழம் வாங்கி இருவருமாகச் சாப்பிட்டார்கள். அந்தப்பார்க்கில் வரிசையாக அசோகமரங்கள் இருந்தன. நம்முடைய கோயிலின் முன்புறம் அசோகமரம் நடவேண்டும். அசோகமரம் எப்பொழுதும் பசுமையாகவும், அழகாகவும், அலங்காரமாகவும் இருக்கும் என்றார்கள். அதுபடியே வீட்டின் முன்புறம் இருபக்கமும் அசோகமரம் நட்டிருக்கிறோம்.

எங்கள் வீட்டு கிரகப்பிரவேசம் 1979ம் ஆண்டு பிப்ரவரி 11ம் தேதி என்று முடிவாகியது. அன்று தைப்பூசம், பௌர்ணமிநாள், பௌர்ணமி தினம் மிகவும் விசேஷமானது என்று சாமி கூறினார்கள். அண்ணாமலை சென்று சாமிக்கு வாங்கியிருந்த வஸ்திரங்களை சமர்ப்பித்தோம். எங்களுக்காக வாங்கியிருந்த வஸ்திரங்களைத் தடவிக்கொடுத்து ஆசிர்வாதம் செய்து கொடுத்தார்கள். கிரகப்பிரவேசத்திற்கு வருபவர்களெல்லாம் ஆசிர்வதிக்கப்பட்டவர்கள் என்று கூறி, திருப்பதி வெங்கடாசலபதி படம் போட்ட பெரிய மிட்டாய் டப்பா கொடுத்து, வருபவர்களுக்கெல்லாம் கொடுக்கச் சொன்னார்கள். சுந்தரேஸ்வரர் உங்கள் கோவிலுக்குள் நுழைந்தபின், அங்கேயே தங்கிவிடவேண்டும். ஆகவே கொல்லைப்புறக்கதவை பூட்டிவிடுங்கள் என்றார்கள். கிரகப்பிரவேசத்திற்கு தன்சார்பாக திரு. சிவசங்கரன் அவர்களது சகோதரி திருமதி. கஸ்தூரியை அனுப்பிவைத்தார்கள். சாமியின் திருவருளால் கிரகப்பிரவேசம் இனிதாக நடந்தது. கொல்லைக் கதவையும்

மூடிவிட்டோம். சிலமாதங்கள் சென்றபின் எங்கள் அம்மா எங்கள் வீட்டிற்கு வந்தார்கள். துவைத்த துணியைக் காயப்போடுவதற்கு, செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுவதற்கு என்று, தலைவாசல் வழியாகப் போய்க்கொண்டிருந்தோம். ஏன் கொல்லைக்கதவைப் புழங்குவதில்லை என்று கேட்டார்கள். சாமி கூறியுள்ளதைச் சொன்னோம். அடுத்து சாமியைத் தரிசித்தபோது எங்கள் அம்மா சாமியிடம், சாமி திலகவதி வீட்டில் கொல்லைப்புறத்தைப் பூட்டியுள்ளதால் சிரமமாக உள்ளது. கொல்லைப்புறத்தில் செய்ய வேண்டிய வேலைகளுக்கெல்லாம் தலைவாசல் வழியாகச் சென்று கொண்டிருக்கிறார்கள் என்று சொல்லிவிட்டார்கள். அப்படியா இந்தபிச்சைக்காரன் பித்துபிடித்த நிலையில் எதையாவது சொல்லிவிடுகிறான். அதை ராஜசேகர்ஜியும் திலகவதியும் அப்படியே கடைப்பிடித்து விடுகிறார்கள். திலகவதி, அம்மா உனக்காக அருமையாக வாதாடினார்கள். வரும் பிள்ளையார் சதுர்த்தியன்று அம்மாவே கொல்லைக்கதவை திறந்து வைக்கட்டும். கதவிற்கு ஊதுபத்திகாட்டி வணங்கி திறக்க வேண்டும் என்றார்கள். அதேபோல் பிள்ளையார் சதுர்த்தியன்று அம்மா கொல்லைக்கதவுக்கு ஊதுபத்திகாட்டி திறந்து வைத்தார்கள்.



## வைத்தீஸ்வரனாக வந்தருளிய லீலை

என் தங்கை உமாவின் கணவர் திரு. சுரேந்திரனுக்கு அவரது திருமணத்திற்கு முன்பு 1963ல் ஏற்பட்ட கார் விபத்தில் முழுங்காலில் அடிபட்டது. 12 வருடங்கள் கழித்து அந்த இடத்தில் வலி மிகவும் அதிகமாக இருந்தபடியால். பிரபல எலும்புச்சிகிச்சை மருத்துவரான Dr. நடராஜனிடம் காண்பிப்பதற்காக சென்னை சென்றிருந்தார். திரு. சுரேந்திரனுக்கு ஒருமாதம்கழித்து முழங்காலில் ஆபரேஷன் செய்யவேண்டும் என்று நாள் குறிக்கப்பட்டது. அதேநாளில் ராஜசேகர்ஜிக்கு சென்னையில் பல்மருத்துவக்கூட்டம் இருந்ததால் நாங்களும் சென்னை சென்றிருந்தோம். சென்னையிலிருந்து திரும்பும்போது திருவண்ணாமலை சென்று சாமியைத் தரிசிக்க வேண்டும் என்று முடிவெடுத்தோம். எங்கள் காரில் உமாவும் குழந்தைகளும் வந்தனர். திரு. சுரேந்திரன் என் அண்ணன் ஞானகிரிகணேசன் காரில், வந்தார். வழி நெடுக மழை கொட்டித்தள்ளியது. எங்கள்கார் முதலில் சென்றுவிட்டது. சாமி பாத்திரக்கடை மேடையில் அமர்ந்திருந்தார்கள். சாமியை நமஸ்காரம் செய்துவிட்டு அமர்ந்தோம். மழை பேரிரைச்சலுடன் பெய்துகொண்டு இருந்தது. அனைவர் மீதும் சாரல் விழுந்தது. இந்த பிச்சைக்காரனுக்கு கைலாசமலையில் இருப்பதுபோல் குளிருகிறது என்று சொல்லிக்கொண்டே இருந்தார்கள். உமாமகள் மீனாக்ஷியைக் கூப்பிட்டு (அப்போது அவளுக்கு 5 வயது) எங்கிருந்து வருகிறீர்கள் என்று கேட்டார்கள், "மதராஸிலிருந்து சாமி" "மதராஸீக்கு எதற்காகப் போனீங்க மீனாக்ஷி" "அப்பாவுக்கு ஆபரேஷன் சாமி" என்றாள். உமாவிடம் விபரத்தைக்கேட்டு அறிந்துகொண்டார்கள். சிறிது நேரத்தில் திரு. ஞானகிரிகணேசனுடைய கார் வந்துவிட்டது. மழையும் நின்றுவிட்டது. திரு. சுரேந்திரனால் காரிலிருந்து இறங்கவும் முடியவில்லை. திரு. ஞானகிரிகணேசனும் திரு. சசீந்தரனும் இரண்டு பக்கமும்

தோள் கொடுத்து தாங்கிவர, சாமியை நோக்கி நொண்டியபடியே மிகவும் சிரமப்பட்டு வந்தார். சாமி அவரை 'நட, நட' என்று கூறி பாத்திரக் கடை நீளம் முழுவதும் நடக்கச் செய்தார்கள். ரைட் அபௌட் டர்ன் என்று கூறி திரும்பி நடக்கச் சொன்னார்கள். இப்படி சிலமுறை அவரை நடக்கச்சொல்லி, அவரைத் தன் அருகில் அமரவைத்தார்கள். தன் கைகளை அவரது முழங்காலில் வைத்தபடியே இருந்து, ஊருக்குச் சென்றபின் இந்தஇடத்தில் 1 மாதம் கடுகு எண்ணெய் தேய்த்து வாருங்கள். அந்த நேரத்தில் முழங்காலை எக்ஸ்ரே எதுவும் எடுக்கவேண்டாம். அது இந்த பிச்சைக்காரன் வேலையைப் பாதித்துவிடும். 1 மாதம் சென்றபின் மருத்துவரிடம் காண்பித்து அவர் சொன்னபடி செய்யுங்கள் என்றார். சுகமாக ஊர் திரும்பினோம். சாமி சொன்னபடியே திரு. சுரேந்திரன் முழங்காலில் கடுகு எண்ணெய் தேய்த்து, 1 மாதம் சென்றபின் சென்னையில் டாக்டர் நடராஜனிடம் காண்பித்தார். எக்ஸ்ரே எடுத்துப் பார்த்து, எந்தக்குறைபாடும் இல்லாததால் ஆபரேஷன் தேவையில்லை என்று சொல்லிவிட்டார்.

1976ம் வருடம் ஏப்ரல் மாதம் திருப்பதி சென்று வெங்கடாசலபதியைத் தரிசித்துவிட்டு திருவண்ணாமலை வந்தோம், சாமி தேரடி மண்டபத்தில் தங்கியிருந்தார்கள். திலகவதி, இந்த பிச்சைக்காரன் உனக்கு என்ன செய்யவேண்டும் என்று கேட்டுக் கொண்டேயிருந்தார்கள். நான் மௌனமாக இருந்தேன். கடந்த 10 ஆண்டுகளாக சிறுநீர் தொற்று நோயால் மிகவும் அவதிப்பட்டுவந்தேன். வீரியமான மாத்திரைகள் எடுத்தும், ஊசிகள் போட்டுக்கொண்டும் சிறிதும் குணமாகவில்லை சிலசமயங்களில் கடுமையான காய்ச்சலுடன் உடலில் நடுக்கமும் ஏற்படும். ராஜசேகர்ஜி சாமியிடம், திலகவதி சிறுநீர் தொற்று நோயால் மிகவும் கஷ்டப்படுகிறாள் என்று சொன்னார். சாமி, வெங்காயம் சாப்பிடு என்றார்கள். நான்

ஏற்கெனவே பழையசாதம் சாப்பிடும்போது உடன் சின்ன வெங்காயத்தையும் சாப்பிடுவதுண்டு, சாமி சொன்னபின் தினந்தோறும் வெங்காயம் சாப்பிட ஆரம்பித்தேன். சிறுநீர் தொற்று போன இடம் தெரியவில்லை. மறுமுறை சாமியிடம் சென்றபோது இதைச் சொன்னேன். உன்னுடைய நம்பிக்கைதான் உன்னைக் குணப்படுத்தியது. இந்த பிச்சைக்காரன் எதுவும் செய்யவில்லை என்றார்கள், உண்மையில் நான் சாமி சாப்பிடச்சொல்கிறார், ஆகவே சாப்பிட வேண்டும் என்று வெங்காயம் சாப்பிட்டேனே தவிர, வேறு எந்தவித உணர்வும் என்னிடம் இல்லை. சாமியின் திருவருள் எதையும் செய்யும்.

*1978* வருடம் மே மாதம் ராஜசேகர்ஜியின் தங்கைக்கு மதுரை மிஷன் ஆஸ்பத்திரியில் ஆண்குழந்தை பிறந்தது. அவர்களுக்கு ஏற்கெனவே இரண்டு பெண்குழந்தைகள் உண்டு. இரண்டுவாரம் கழித்து ஆஸ்பத்திரியிலிருந்து டிஸ்சார்ஜ் ஆகி எங்கள் வீட்டிற்கு வந்தார்கள் அன்றிரவு குழந்தைக்கு ரொம்பவும் முடியாமல் போய்விட்டது. பால்புகட்டினால் ஆசனவாயில் வழியாக பாலாகவே வெளியேறியது. குழந்தையை எடுத்துக்கொண்டு மிஷன் ஆஸ்பத்திற்குச் சென்றார்கள். எனக்கு மிகவும் பயமாகிவிட்டது, நம் வீட்டிற்கு பிள்ளைப் பேறுக்காக வந்தார்களே. இப்படி ஆகிவிட்டதே என்று ஒரே கலக்கம். சாமிக்கு குழந்தையின் நிலையைப் பற்றி எழுதிவிட்டு நீங்கள்தான் காப்பாற்றவேண்டும் என்றுகேட்டு பூஜையறையில் சாமிபடத்துக்கு முன் அந்த லெட்டரை வைத்துவிட்டேன், ஹாலில் சோபாவில் அமர்ந்து, சாமியின் நாமத்தை பக்தி சிறிதுமில்லாமல், பயத்துடன் சொல்லிக்கொண்டே இருந்தேன். கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. திறந்து பார்த்தால் சாமி நிற்கிறார். அடுத்த நொடி நானும் சாமியும் மிஷன் ஆஸ்பத்திரி 3வது மாடியில் இருக்கிறோம். சாமி, குழந்தை இருந்த அறையின் கதவைத்திறந்து உள்ளே சென்றார். நான் வெளியே

இரும்புக்கிராதியில் சாய்ந்தபடி நின்றிருந்தேன். சிறிது நேரத்தில் அறையை விட்டு வெளியே வந்த சாமி He has been saved Tilakavati (திலகவதி, அவன் காப்பாற்றப்பட்டு விட்டான்) என்றுகூறி, தனது சால்வையை வீசி தோளில் போட்டபடியே காரிடாரில் சிறிது தூரம் சென்று மறைந்துவிட்டார்கள். பழையபடி கதவைத்தட்டும் சப்தம் கேட்டது. ராஜசேகர்ஜி என்பெயர் சொல்லி அழைக்கும் குரல் கேட்டது. விழித்துப்பார்த்தால் வீட்டில் சோபாவில் உட்கார்ந்தபடியே இருக்கிறேன். எனக்கு ஒன்றும் புரியவில்லை ராஜசேகர்ஜிக்கு கதவைத் திறந்துவிட்டேன். குழந்தை எப்படி இருக்கிறான் என்று கேட்டேன். இன்னமும் ஆபத்தான நிலையில்தான் இருக்கிறான் என்றார்கள். ஆனால் அன்றிலிருந்து உடல்நிலையில் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேற்றம் ஏற்பட்டு, இன்று நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கிறான்.

1986 வருடம் ராஜசேகர்ஜிக்கு முழங்கால் மூட்டு வீங்கி வலி மிகவும் அதிகமாக இருந்தது. வீக்கம் பெரியதாக இருந்ததால், உட்கார நடக்க சிரமப்பட்டார். சாமியிடம் சென்றபோது ராஜசேகர்ஜி சிரமப்பட்டு உட்காருவதைக் கண்டு, சாமி தன்னருகில் அவரை அமரச்செய்து ½ மணி நேரத்திற்கும் மேலாக அவரது முழங்காலைத் தடவி விட்டார்கள். வெள்ளைப்பூண்டை பாலில் போட்டு பால் பாதியளவாக வற்றும்வரை காய்ச்சி, அதை 48 நாட்களுக்கு சாப்பிடச்சொன்னார்கள். 48 நாட்களுக்கு முன்பே வீக்கம் வற்றி வலிமுற்றிலுமாகப் போய்விட்டது.

லம்போதரன் புஷ்பவேணிக்கு முதல் குழந்தை ஆறுவாரங்களுக்கு முன்பே பிறந்துவிட்டான். குறைப்பிரசவத்தில் பிறந்ததால் அவனால் தானாக பால் குடிக்கமுடியவில்லை ஸ்பூனால் புகட்டும் போது புரையேறி உடம்பு நீலநிறமாக மாறிவிட்டது. மிகவும் பதட்டத்துடன் மதுரை T.V.S. குழந்தைகள் சிறப்பு மருத்துமனைக்கு எடுத்துச் சென்றோம். அங்கு 2 வாரம் இன்குபேட்டரில்

வைத்திருந்தார்கள். ராஜசேகர்ஜி சாமிக்கு குழந்தையின் உடல்நிலை கவலைக்கிடம் என்று தந்தி அடித்துவிட்டார். அச்சமயம் குமாரவேல் தான் எடுத்திருந்த சாமியின் புகைப்படங்களைப் பெரிதாக்கி லாமினேட் செய்து, திருவண்ணாமலைக்கு எடுத்துச் சென்றான். சுதாமாவில் தரிசனம் செய்தபோது, குழந்தையின் உடல்நிலை பற்றி விசாரித்து விட்டு, பெயர் சூட்டியாகிவிட்டதா என்று கேட்டார். இல்லை என்று சொல்லவும், திலகவதிக்கு மீனாட்சி சுந்தரேஸ்வரரை ரொம்பவும் பிடிக்கும். ஆகவே குழந்தைக்கு மீனாட்சிசுந்தரம் என்று பெயர் வைக்கவும் என்றார். சிறிது நாட்கள் சென்றபின் மீனாட்சிசுந்தரம் தானாகப் பால்குடிக்க ஆரம்பித்துவிட்டான். இது குறித்து சாமிக்குக் கடிதம் எழுதியிருந்தேன். கடிதத்தைப் படித்தவுடன், தன் கைகளைத் தட்டிக் கொண்டு திலகவதி பேரன் தானாகப் பால்குடிக்க ஆரம்பித்துவிட்டான் என்று சந்தோஷப்பட்டார்களாம்.

மீனாட்சி சுந்தரத்துக்கு 4 வயதானபோது சென்னையில் மோட்டார் பைக்கில் அடிபட்டு, 3 நாட்கள் கோமாவில் இருந்தான். தலையில் அடிபட்டதால் மூளையில் இரத்தம் உறைந்திருந்தது. சாமி ராஜிம்மா (மணிசார்) மூலம் ஆஸ்பத்திரிக்கு போன்பண்ணி கவலைவேண்டாம். குணமடைந்துவிடுவான் என்றார்கள். அதுபோல் அவனும் கோமாவிலிருந்து வெளியேறி, நினைவு திரும்பி, மெல்ல குணமடைந்தான்.

குமாரவேலுவின் மனைவி ஐஸ்வர்யா, மூத்தவள் பவதாரிணி பிறந்தபின் இரண்டாவது முறையாகக் கருவுற்றாள். அச்சமயம் அவளுக்கு முழங்காலில் வலி ஏற்பட்டது. சில தினங்களுக்குமுன் பைக்கிலிருந்து இறங்கும்போது இடித்துவிட்டதால் உண்டான வலியாக இருக்கலாம் என்று நினைத்துக் கொண்டோம். வெந்நீர் ஒத்தடம் கொடுத்தும், மருந்து கொடுத்தும் 3 மாதங்கள் ஆகியும் வலி குறையவில்லை. எக்ஸ்ரே எடுத்துப் பார்த்தில்

முழங்காலில் கட்டி இருப்பது தெரிந்தது. அவள் கருவுற்றிருந்தமையால் கட்டியின் வளர்ச்சியும் வேகமாக இருந்தது. சென்னைக்கு அழைத்துச் சென்று பிரபல எலும்புசிகிச்சை நிபுணரிடம் காட்டியபோது, சோதனைகள் செய்துபார்த்து, கான்சர் கட்டி போல் இருக்கிறது. உடனடியாக ஆபரேஷன்செய்து கட்டியை அகற்ற வேண்டும். ஆபரேஷன் செய்வதால் கருவுக்கு பாதிப்பு ஏற்படும். ஆகவே கருச்சிதைவு செய்யவேண்டும் என்றார்கள். அப்போது கருவளர்ச்சி 6 மாதகாலம். ஐஸ்வர்யா கருச்சிதைவுக்கு சம்மதிக்கவில்லை, உமா மணிசாருக்கு போன்பண்ணி இத்தகவலை சாமியிடம் தெரிவித்துவிடும்படி கூறினாள். அச்சமயம் சாமி டைனிங் ஹாலில் தரிசனம் தந்து கொண்டிருந்தார்கள். மேடையில் அமர்ந்திருந்த சாமியிடம் விஷயத்தைக்கூற, எந்தக் கால், எந்தஇடம் என்று கேட்டு, தனது வலது கால் முட்டியைத் தடவிக் கொடுத்துக் கொண்டார்கள். தரிசனநேரம் முடிந்து சாமி எழுவதற்கு முயற்சிக்கையில், வலது கால் முட்டிமடங்கி கீழே சரிந்துவிட்டார்கள். அதனால் 3 நாட்கள் ஆசிரமத்தில் தரிசனம் கிடையாது என்று சொல்லிவிட்டார்கள். எங்களுக்கு இந்த விஷயம் தெரியாது. சாமியைத் தரிசிக்க ஆசிரமம் சென்றோம். ராஜிம்மா விஷயத்தைக் கூறி 3 நாட்கள் தரிசனம் கிடையாது என்றார்கள். ஐஸ்வர்யாவின் நோயினால் மனம் நொந்துவந்த நாங்கள், சாமி தரிசனமும் கிடையாது என்றவுடன் மிகவும் சோர்வடைந்துவிட்டோம். ஆனால் கருணாமூர்த்தியான எம்பெருமான் மறுநாள் காலை 7 மணிக்கு ஆஸ்ரமத்திற்கு காலை உணவு குடிசைக்கு வருகைபுரிந்து எங்களையும் வரவழைத்தார். ஐஸ்வர்யாவைப்பற்றி அவ்வளவு விஷயங்ளையும் கேட்டு அறிந்தார்கள். திலகவதி சுந்தரேஸ்வரரின் சிநேகிதி (Tilakavathi is a friend of Sundareswara) ஆகவே சுந்தரேஸ்வரா கண்டிப்பாக உதவி செய்வார் என்றுகூறி, ஐஸ்வர்யாவுக்கு இப்பொழுது ஆபரேஷன் தேவையில்லை என்று

சொல்லிவிட்டார்கள். சென்னைக்கு இதுகுறித்து தகவல் அனுப்பினோம். ஐஸ்வர்யா காலை அசைக்கமுடியாதபடி மாவுகட்டுப்போட்டு சிவகாசி வந்துவிட்டாள். ஆனால் துரதிர்ஷ்டவசமாக இரண்டுவாரம் கழித்து வலதுகால் முட்டி எலும்பு முறிவு ஏற்பட்டு கீழே விழுந்துவிட்டாள். ஆம்புலன்ஸில் மதுரைக்கு அழைத்துவந்து, Dr. தேவதாஸ் ஆஸ்பத்திரியில் சேர்த்தோம். மறுநாள் மதியம் 3 மணிக்கு எலும்புமுறிவுக்கு ஆபரேஷன் என்றார்கள். இவ்விஷயத்தை மணிசாரிடம் கூறி சாமியிடம் தெரிவிக்கச் சொல்லிவிட்டோம், வலதுகால் முட்டி மிகவும் பாதிக்கப்பட்டு இருந்ததால், முட்டியை அகற்றிவிட்டு, இடுப்பிலிருந்து எலும்பை எடுத்து அந்த இடத்தில் பொருத்தினார்கள். ஆகவே அவளால் வலதுகாலை மடக்க இயலாது. படுக்கையிலிருந்த படியே 2வது பெண்குழந்தை கயல்விழி சிசேரியன் மூலம் பிறந்தாள். ஏறக்குறைய 6 மாத காலம் படுக்கையில் இருந்தாள். பின் ஆறுமாதகாலம் காலிபர்ஸ் துணையுடன் நடந்தாள் ஐஸ்வர்யா காலிபர்ஸ் போட்டு நடந்தபோது, ஆஸ்ரமத்துக்கு கூட்டிச்சென்றோம். சாமி அவளை நடக்கச்சொல்லி உன்னிப்பாக கவனித்தார்கள். பின்னர் அவள் காலிபர்ஸ் இல்லாமல் வந்தபோதும் அவளை நடக்க வைத்து ஆசிர்வாதம் செய்தார்கள். ஆபரேஷன் செய்த இடத்திலிருந்து திசுக்களை எடுத்து பயாப்ஸிக்கு வேலூர் அனுப்பினார்கள். 3 மாதங்கள் சென்றபின் கான்சர் இல்லை என்று ரிசல்ட் வந்தது. ஒருநாள் குமார் மதுரை வந்தான். மிகவும் சோர்வாக, விரக்தியாகக் காணப்பட்டான். ராஜசேகர்ஜிக்கு தாங்க இயலவில்லை. அன்றிரவே பஸ்ஸில் நானும் அவரும் திருவண்ணாமலை கிளம்பிவிட்டோம். ஆஸ்ரமத்திற்கு ஆட்டோவில் வந்து இறங்கியபோது, காலை உணவு குடிசையிலிருந்து சாமி கார் வருவது தெரிந்தது. ஆகவே ஒரு ஓரமாக ஒதுங்கிநின்றோம். யாகசாலை அருகே கார் நிறுத்தப்பட்டது. கதவைத்திறந்து கொண்டு டிரைவர் ரவிசார் வந்தார். பகவான் உங்களை அழைக்கிறார் என்று

கூறினார். வேகமாக காரின் அருகில் சென்று வணங்கினோம். ஓ, ராஜசேகர்ஜி நம்முடைய பிரச்னையைத்தீர்க்க வந்துவிட்டார் என்று கூறினார்கள். 2 நாட்களாக விஜிம்மாவிற்கு பல்வலி இருந்ததாம். வெளியில் யாரிடமும் காண்பிக்கவேண்டாம். இந்த பிச்சைக்காரனுக்கு ராஜசேகர்ஜியிடம் தான் நம்பிக்கை உள்ளது. அவர் அண்ணாமலை வரும்போது காண்பித்துக் கொள்ளலாம் என்று சொல்லிவிட்டார்களாம். பின் 10 மணி தரிசனத்திற்கு வந்தபொழுது என்னையும் ராஜசேகர்ஜியையும் அழைத்தார்கள். பிரதான்மந்திரின் நுழைவாயிலில் அவர் அருகே நாற்காலியில் அமர்ந்தோம். சிறிதும் கவலைவேண்டாம். ஐஸ்வர்யா 100 சதவீதம் சரியாகிவிடுவாள் என்றார்கள். மனமெல்லாம் இலேசாகியது. 'ராஜசேகர்ஜி நம்முடைய பிரச்னையைத் தீர்க்க வந்துவிட்டார்' என்று சொல்லி, இந்த பிச்சைக்காரன் உங்கள் பிரச்னையைத் தீர்த்து விட்டேன் என்று குறிப்பால் உணர்த்தினார்களோ. தனது வலதுகால் மடங்கி கீழே விழுந்து, ஐஸ்வர்யாவின் நோயைத் தான் வாங்கிக் கொண்டார்களோ என்றுதான் எண்ணத் தோன்றுகிறது. அற்புதமூர்த்தியான நம் வைத்தீஸ்வரரின் கருணையை எண்ணி எண்ணி உள்ளம் விம்முகிறது.



## பிள்ளைகளுக்கு வழிகாட்டியருளிய லீலை

1975ல் சாமியிடம் சென்றபோது லம்போதரனுக்கு 11 வயது குமாரவேலுக்கு 9 வயது ஆனால் சாமியின் திருமுன்னர் எவ்வளவு நேரம் உட்கார நேரிட்டாலும், மிகவும் அமைதியாக அமர்ந்திருப்பார்கள். இந்த பிச்சைக்காரன் இவ்வளவு ஒழுக்கமான குழந்தைகளைப் பார்த்ததே இல்லை. ராஜசேகர்ஜி ஒழுக்கத்தை கொடுத்துள்ளார். திலகவதி அன்பைக் கொடுத்துள்ளாள். இதை அநேகதடவை சொல்லியிருக்கிறார்கள். ஒருமுறை பாத்திரக்கடை வாசலில் இருந்தபோது, இருவரையும் பார்த்து என்ன படிக்கப் போகிறீர்கள் என்று கேட்டார்கள். இருவரும் என்ஜினியரிங் படிக்கப் போகிறோம் என்றார்கள். அப்பாவின் பல்மருத்துவத்தை யாராவது அவசியம் படிக்கவேண்டும் என்றவுடன் பிள்ளைகள் இருவரும் தலை குனிந்தபடி அமர்ந்திருந்தார்கள். சாமி மீண்டும் கேட்கவும். நீண்டநேர தயக்கத்திற்குப் பின் லம்போதரன் மெல்ல கையை உயர்த்தினான். சாமிக்கு ஒரே சந்தோஷம், 'ஜய ஜய லம்போதரா' என்று பலமுறை வாழ்த்தினார்கள்.

லம்போதரனையும், குமாரவேலுவையும் சாமி பாடச் சொன்னார்கள். பாட்டு எதுவும் தெரியாது என்றார்கள். சிறிது நேர தயக்கத்திற்குப்பின் பள்ளியில் பாடும் "குருபிரம்மா குருவிஷ்ணு" என்ற பாடலைப் பாடினார்கள். சாமிக்கு மிகவும் சந்தோஷம். இன்னொரு பாட்டு பாடச் சொன்னார்கள். லம்போதரன் ஹிந்தியில் "ப்யாரே பாபு ப்யாரே பாபு" என்ற பாடலைப் பாடின்ரான். காந்திஜி பற்றிய பாடலைக்கேட்டு சாமி பாரவசமடைந்தார்கள். தன் மதுரமான குரலில், கண்களில் ஒளிவீச கைகளை ஆட்டியபடி "காந்திகி ஜெய், மகாத்மா காந்திகி ஜெய் மோகன்தாஸ் கரம்சந்த் காந்திகி ஜெய் மகாத்மா காந்திகி ஜெய்" என்று பாடினார்கள். லம்போதரனிடம் சூப்பர் மேன் யார் என்று கேட்டார்கள். அசாதாரண சக்தி

படைத்த மனிதன் என்று பதில் சொன்னான். மகாத்மா காந்தி தான் சூப்பர் மேன் என்று சாமி கூறினார்கள்.

ஒருசமயம் சந்நிதித்தெரு வீட்டில் பக்தர் ஒருவர் ஒரு கூஜா நிறைய (ஏறக்குறைய 2 லிட்டர்) கெட்டியான மாம்பழச்சாறு கொண்டு வந்தார். லம்போதரனை அருகில் அழைத்து அமரச்செய்து, 'லம்போதரா குண்டோதரா' என்று கூறி 1 டம்ளர் சாறு கொடுத்தார்கள். கட கட வென்று நொடியில் குடித்துவிட்டான். மீண்டும் லம்போதரா குண்டோதரா என்று அழைத்து 1 டம்ளர் சாறு, அதையும் ஒரே மடக்கில் குடித்து முடித்துவிட்டான். இவ்வாறு 2 லிட்டர் மாம்பழச்சாறையும் சில நிமிடங்களில் குடித்துவிட்டான். சாமி லம்போதரா குண்டோதரா என்று சொல்லி, தன் வெடிச்சிரிப்பை உதிர்க்க, நாங்களும் தொடர்ந்து சிரிக்க, ஒரே கலகலப்பாக இருந்தது.

லம்போதரனுக்கு 1984ல் கர்நாடகாவிலுள்ள தாவண்கெரே பாபுஜி பல்மருத்துவக்கல்லூரியில் இடம் கிடைத்தது. 1988ல் B.D.S. படித்து முடித்தான். அச்சமயம் குருபூர்ணிமா அன்று சாமியைத் தரிசனம் செய்ய, நாங்கள் சகோதரிகள் மூவரும் வந்திருந்தோம். லம்போதரன் படிப்பைப்பற்றி விசாரித்தார்கள். பட்டம் பெற்றவுடன் மேற்படிப்புத் தேவையில்லை. ராஜசேகர்ஜியுடன் சேர்ந்து 3 வருடங்கள் பல் மருத்துவத்தில் ஈடுபட்டால், லம்போதரனைத் தோற்கடிக்க யாரும் கிடையாது. ராஜசேகர்ஜி விருப்பட்டால் பெரியமருத்துவர் யாரிடமாவது லம்போதரனை 6 மாத பயிற்சிக்கு அனுப்பலாம் என்றார்கள். ராஜசேகர்ஜியும் லம்போதரனும் மேற்படிப்பு படிக்கவேண்டும் என்பதில் மிகவும் தீவிரமாக இருந்தார்கள். ஆனால் சாமி இவ்வாறு சொல்லியவுடன், அதை அப்படியே ஏற்றுக்கொண்டார்கள். சிறிது நாட்கள் சென்றவுடன், லம்போதரன் அவனுடைய நண்பனது திருமண நிச்சயதார்த்த விழாவிற்காக பெங்களூர்

சென்றான். திரும்பும் வழியில் சாமியைப் பார்க்க திருவண்ணாமலைவந்து சந்நிதித்தெரு இல்லத்தில் நுழையும்போதே, "லம்போதரன் மேற்படிப்பு படிக்கலாம்" என்று சிரித்துக் கொண்டே கூறினார்கள். வீட்டிற்குள் சென்று இரண்டு ரோஜா மலர்களை எடுத்து வந்து கொடுத்தார்களாம். அப்பொழுதுதான் செடியிலிருந்து பறித்து எடுத்து வந்தமாதிரி புத்தம் புது மலர்களாக இருந்தன. மிகுந்த உற்சாகத்துடன் மதுரை திரும்பினான். பின் தாவண்கெரேயில் பயிற்சி மருத்துவப்படிப்பை முடித்தவுடன், ராஜசேகர்ஜியுடன் அவரது க்ளினிக்கில் வேலை பார்த்து வந்தான். சாமி அவனுக்கு முதலில் திருமணம் செய்து விடலாம். பின் மேற்படிப்பில் சேர்க்கலாம் என்றார்கள். அதன்படி அவனுக்கு எங்கள் பெரியம்மா பேத்தி புஷ்பவேணியுடன் 1990ல் திருமணம் நடந்தது. 1991ல் தாவண்கெரேயில் M.D.S.ல் இடம் கிடைத்து படித்து முடித்தான். தற்சமயம் ராஜசேகர்ஜியுடன் பல்மருத்துவத் தொழிலில் ஈடுபட்டு வருகிறான்.

சாமி குழந்தைகளை சில சமயம் பாடச் சொல்லுவார்கள், சிலசமயம் ஏதாவது புத்தகம் கொடுத்து வாசிக்கச் சொல்லுவார்கள், ஒருசமயம் குமாரவேலுவை ஏதாவது கதைச்சொல்லச் சொன்னார்கள், அவன் சிவாஜியைப்பற்றிய நிகழ்ச்சி ஒன்றைக் கூறினான். சாமிக்கு மிகவும் மகிழ்ச்சி. குமாரவேலுவுக்கு காக்கா நரி கதையெல்லாம் பிடிக்காது. வீரசிவாஜி தான் பிடிக்கும் என்று மிகவும் சிலாகித்துக் கூறினார்கள்.

குமாருக்கு 10 வயது இருக்கும். சாமி எங்களுடன் நாடார் லாட்ஜில் இருந்தார்கள். கீழே திருமண வைபவம் நடந்து கொண்டிருந்தது. இனிமையான நாதசுர இசை காற்றில் மிதந்து வந்து கொண்டிருந்தது. குமார் சாமியின் அருகில் கட்டிலில் அமர்ந்து பாதசேவை செய்து கொண்டிருந்தான். சாமி குமாரவேலுவைப் பார்த்து புன்சிரிப்புடன் குமாரவேலு கல்யாணம் மிகவும்

விமரிசையாக நடக்கும். மணப்பெண் அழகாக இருப்பாள். அவள் அழகைக் கண்டு ரம்பா, ஊர்வசி, திலோத்தமா அவளை ஏறெடுத்துப் பார்க்கவே நாணம் கொள்வார்கள். முப்பத்து முக்கோடி தேவர்கள் வருவார்கள். அகத்தியர் வருவார், ரிஷிகள் எல்லாம் வருவார்கள். கங்கைநதி ஆனந்தக் கூத்தாடும். வைகைநதியும் ஆனந்தக் கூத்தாடும். குமாரவேலு திருமணத்திற்குப்பின் இந்தப் பிச்சைக்காரனைப் போன்றவர்கள் பிச்சை எடுக்கவேண்டிய அவசியமே ஏற்படாது. என்று சொல்லிக்கொண்டே இருந்தார்கள். குமாரவேலுவுக்கு 1993ம் ஆண்டு ஐஸ்வர்யாவுடன் திருமணம் நடந்தது. சாமியின் கூற்றுப்படியே, எப்பொழுதும் வறண்டு கிடக்கும் வைகைநதியில் ஏற்க்குறைய 6 மாதகாலத்திற்கு தண்ணீர் பிரவாகமாக ஓடியது.

சந்நிதித்தெரு இல்லத்திற்கு, திரு. வெங்கட்ரமணி வந்திருந்தார். சாமியிடம் தான் நாடி ஜோதிடம் பார்ப்பதைப் பற்றிக் கூறினார். சாமி திலகவதிக்கு நாடி ஜோதிடம் பார்க்கமுடியுமா என்று கேட்டார்கள். திரு. ரமணி அவர்கள் என்னைப்பெருவிரலாலும் சுட்டு விரலாலும் குங்குமத்தை தொடச் செய்து, ஓலைச் சுவடிகளையும் அந்த இரண்டு விரல்களால் தொடும்படி சொன்னார். பின் ஏடுகளை வாசிக்க ஆரம்பித்தார். சாமி அதை டேப்ரிகார்டரில் பதியும்படி சொன்னார்கள். சற்றேறக்குறைய ¼ மணிநேரம் வாசித்திருப்பார். கேளம்மா திலகத்தாளே என்று ஆரம்பித்து கணவர் குழந்தைகள் தாயாருடன் வந்திருக்கிறாய். ஜீவன் முக்தர்கள் ஐவர் உனக்கு ஆசிர்வாதம் செய்ய காத்துக்கொண்டிருக்கிறார்கள். உன் பிள்ளைகளில் மூத்தவன் மருத்துவனாகவும், இளையவன் அருளாளனாகவும் ஆவார்கள் என்றார். வாசித்துமுடித்தவுடன் இந்த பிச்சைக்காரனுக்கு ஒன்றும் புரியவில்லை என்று சாமி சொல்லிவிட்டார் லம்போதரனும் குமாரவேலுவும் அச்சமயம் சிறுவர்கள்.

நாடி ஜோதிடத்தில் கூறியபடி லம்போதரன் பல் மருத்துவனாகவும், குமாரவேலு பூஜ்ய ஸ்ரீ ஸ்ரீ முரளீதரஸ்வாமிஜியின் வழிகாட்டுதலின்படி சிவகாசியில் நிறுவப்பட்டுள்ள பகவான் யோகிராம்சுரத்குமார் பஜனாஸ்ரமத்தில் பகவான் யோகிராம்சுரத்குமாருக்கு மிகவும் சிரத்தையுடன் பக்தியுடன் பூஜை செய்து வருகிறான்.

குமாரவேல் அண்ணா பல்கலைக் கழகத்தில் கிண்டி இன்ஜினியரிங் கல்லூரியில் 1987ல் அச்சகப்படிப்பில் B.E. பட்டம் பெற்றான். சிவகாசியில் என் சகோதரர்கள் நடத்தி வந்த காரனேசன் லித்தோ பிரஸ்ஸில், அவனுக்கு தொழில் மேலாளராக வேலை கிடைத்தது. அங்கு அவனுக்கு அச்சகத்துறையில் நல்ல பயிற்சி கிடைத்தது. சாமி அவனிடம் நாம் சொந்தமாக ஆப்செட்மிஷின் வைப்போம் என்றார்கள். அப்போது சொந்தமாகப் பிரஸ் வைக்கும் அளவுக்கு அவனுக்கு வசதியில்லை. ஆகவே வெளியில் ஆர்டர் வாங்கி மற்ற அச்சகங்களில் அச்சடித்துக் கொடுக்கலாம் என்று முடிவெடுத்தான். நிறுவனத்திற்கு என்ன பெயர் வைக்கலாம் என்று யோசித்து, ராஜசேகர்ஜி பெயரையும் என் பெயரையும் சேர்த்து, “ராஜ்திலக் ப்ரிண்டர்ஸ்” என்று பெயர் வைத்தான். 1992ம் ஆண்டு சித்திரைமாதம் புதுக்கணக்கு போடலாம் என்று முடிவெடுத்து, சாமியிடம் ஆசிர்வாதம் பெற நானும் குமாரும் திருவண்ணாமலை சென்றோம். ராஜ்திலக் ப்ரிண்டர்ஸ் என்ற முத்திரை, லெட்டர் பேட் எல்லாம் தயார்பண்ணி எடுத்துக்கொண்டு வந்தான். சந்நிதித்தெரு இல்லம் சென்று, புதுக்கணக்கு போடப்போகும் விபரத்தைச் சொல்லி, ‘ராஜ்திலக் ப்ரிண்டர்ஸ்’ என்று பெயர் சூட்டியிருப்பதையும் சொன்னான். சாமி வேண்டாம். திலகவதிப்ரிண்டர்ஸ் என்ற பெயரை வைத்துக்கொள்வோம் என்றார்கள். சாமி சொன்னால் அதற்கு மறுபேச்சும் உண்டோ? குமாரவேலுவும்

ஒத்துக்கொண்டான். நானும், குமாருமாக 3 நாட்கள் சாமியின் சந்நிதியில் ஆனந்தமாக இருந்தோம். 3வதுநாள் மாலையில் தரிசனத்திற்கு வந்த பக்தரிடம் ராஜ்திலக் என்றால் அர்த்தம் என்ன என்று சாமி கேட்டார்கள். ராஜ்திலக் என்றால் பட்டாபிஷேகம் என்று அர்த்தம் என்றார். பட்டாபிஷேகம் என்றால் காரனேசன், ஆகவே ராஜ்திலக் என்றால் காரனேசன். குமாரவேலு, நாம் ராஜ்திலக்ப்ரிண்டர்ஸ் என்ற பெயரையே வைத்துக்கொள்வோம் என்று கூறி ஆசிர்வதித்து அனுப்பினார்கள். குமாரவேலுக்குத் தானாகத் தேடிவந்து முதன்முதலில் ஆர்டர் கொடுத்தவர் பெயர் சுந்தரேசன். அவனுடைய வேலையில் மிகவும் திருப்தியும் அடைந்தார். அவனுடைய உழைப்பையும் தொழில்நேர்த்தியையும் பார்த்து சிறிது சிறிதாக ஆர்டர்கள் வர ஆரம்பித்தன. சொந்தமாக மிஷின் வாங்கினால் நன்றாக இருக்கும் என எண்ணினான். அடுத்து சாமி தரிசனத்திற்குச் சென்றபோது, சாமியிடம் 5 லட்சம் ரூபாய் கடன் கிடைத்தால், அச்சு எந்திரம் ஒன்று வாங்கிக் கொள்வேன் என்றான், 5 லட்சம் கடன் எல்லாம் வேண்டாம். முதலில் திருமணம் செய்ய வேண்டும் என்று சொன்னார்கள். அதன்படி ஐஸ்வர்யா குமாரவேலு திருமணம் 1993 ஜனவரியில் நடந்தது. சாமியின் அருளாசியினால் திருமணம் முடிந்து ஒருவாரத்தில் சிறிதாக ஒருகலர் அச்சுஎந்திரம் ஒன்றுவாங்கி, அவன் வீட்டின் பின்புறத்திலேயே அச்சகம் அமைத்தான். சாமியின் அளப்பரும் கருணையால் சிறிது சிறிதாக அச்சகத்தை விரிவுபடுத்தினான்.

இவ்வாறாக குழந்தைகளின் படிப்பு, தொழில், திருமணம் என்று ஒவ்வொரு கட்டத்திலும், கைபிடித்து அழைத்துச் செல்லும் தந்தைபோல் வழிகாட்டினார்கள்.



## ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்றுணர்த்திய லீலை

மீனாட்சியம்மன் கோவில் சென்று அம்மனை தரிசித்துவிட்டு சாமி சந்நிதி சென்றேன். சுந்தரேசப் பெருமானை தரிசித்துக் கொண்டிருக்கும் போது, அண்ணாமலையில் சாமியின் சந்நிதியில் இருப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது. வீடு திரும்பிய பின்பும், எதனால் அப்படி ஒரு உணர்வு ஏற்பட்டது என்ற எண்ணம் வந்து கொண்டே இருந்தது. சாமிக்கு இதுபற்றி கடிதம் எழுதினேன். மறுமுறை திருவண்ணாமலை சென்றபோது, நீ கடிதத்தில் எழுதியிருந்த விஷயம் முற்றிலும் உண்மையே என்றார்கள்.

ஒவ்வொரு முறையும் சாமி தரிசனத்திற்கு செல்வதற்கு முன்னால், மீனாக்ஷி அம்மன் கோவிலுக்குச் சென்று விபூதி, குங்குமம் பிரசாதம் வாங்கி திருவண்ணாமலை செல்வது வழக்கம். அவ்வாறு ஒருமுறை கோயிலுக்குச் சென்றபோது அன்று திருக்கல்யாணம். கோபுர வாசலிலிருந்தே மக்கள் கூட்டம் அலைமோதியது. கோவிலுக்குள் நுழைந்த நான் கூட்டத்தில் மாட்டிக் கொண்டேன். அங்குலம் அங்குலமாகக் கூட நகரமுடியவில்லை. கூட்டமோ முன்னேறுவதற்கு முண்டியடித்துக் கொண்டிருந்தது. எனக்கு மூச்சுத்திணறல் ஏற்பட்டது. வெளியேறவும் வகையில்லை. யானையை வைத்து கூட்டத்தை நெறிப்படுத்திக் கொண்டிருந்தார்கள். கூட்டம் என்னை தள்ளிக் கொண்டு போய் யானையின் காலடியருகே நிறுத்திவிட்டது. எனக்கு உதறல் எடுக்க ஆரம்பித்துவிட்டது. நாம் தான் ஜீவன் முக்தரிடம் நடமாடும் தெய்வம் பகவான் யோகிராம்சுரத்குமாரிடம் வந்து விட்டோமே, பின் இந்த கல்லுச்சாமியையெல்லாம் பார்க்க வரவேண்டுமா என்ற எண்ணம் ஓடியது. ஒரு வழியாக கூட்டத்தால் தள்ளப்பட்டு அம்மன் சந்நிதிக்கும் சாமி சந்நிதிக்கும் சென்று வணங்கி, விபூதி குங்குமப்

பிரசாதம் பெற்று வீடு திரும்பினேன். மறுநாள் திருவண்ணாமலை சென்று சந்நிதித்தெரு வீட்டில் சாமியின் திருவடிகளைப் பணிந்து, விபூதி குங்குமப்பிரசாதத்தை சமர்ப்பித்தது தான் தாமதம். "Don't think it is an ordinary stone. 100% divinity is there. The same powerful sundareswara who performed all those 64 leelas is there. Dont't think it is an ordinary stone." (அதை சாதாரணக் கல் என்று எண்ணாதே. 100 சதவீதம் தெய்வீகம் அங்கு உள்ளது. 64 லீலைகளையும் நிகழ்த்திக்காட்டிய அதே சக்திவாய்ந்த சுந்தரேசப்பெருமான் அங்கு வீற்றிருக்கிறார். அதை சாதாரணக்கல் என்று எண்ணாதே) என்று அழுத்தந்திருத்தமாகக் கூறினார். திலகவதி, நீ எவ்வளவு பெரிய பாக்யசாலி. மதுரையில் குடியிருக்கிறாயே. மதுரையின் வீதிகளில் சுந்தரேசப்பெருமான் தன் பாதங்கள் பதிய நடந்திருக்கிறாரே. வளையல் விற்றிருக்கிறாரே. விறகைச் சுமந்திருக்கிறாரே என்று கூறி ஆனந்தப்படுவார். இவ்வாறு கூறும்போதெல்லாம் சாமியின் முகம் ஜோதியாகச் சிவந்து ஒளிரும். உன் மீது அருள்மழை பொழிய சுந்தரேசப்பெருமான் உன் வீட்டு வாசலில் காத்துக்கொண்டு இருக்கிறார், என்பார். எல்லாமாகிய பரம்பொருள் தெய்வத் தந்தை யோகிராம்சுரத்குமார் இந்த எளியவளுக்கு இரங்கி, மதுரையில் சுந்தரேசப்பெருமானாக வீற்றிருக்கிறார் என்று எண்ணி உள்ளம் விம்மும். இந்த பிச்சைக்காரனைப் பார்க்க விரும்பினால், நேரத்தையும் பணத்தையும் செலவழித்துக் கொண்டு திருவண்ணாமலை வரவேண்டாம். சுந்தரேசப்பெருமானை தரிசித்தால் உனக்கு அதே மனநிறைவு கிட்டும் என்பார்கள்.

சாமியுடன் அண்ணாமலையாரை திருக்கோயிலுக்குள் சென்று தரிசிக்கும் பாக்கியம் ஒரு நாலைந்துமுறை கிடைத்திருக்கிறது. 1975ம் ஆண்டு தீபத்திருவிழாவிற்கு இரண்டு மூன்று நாட்களுக்கு முன்னர் அண்ணாமலையார் திருக்கோவிலுக்குச் சென்றோம். கூட்டம் அதிகமாக

இருந்தது. சாமியைத் தரிசிப்பதற்கு வரிசையில் வருவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தது. கொடிமரம் வரையில் வரிசை இருந்தது. நாங்களும் சாமியுடன் வரிசையில் நின்றோம். நுழைவுக்கட்டணம் 1 ரூ என்று வசூலித்துக்கொண்டிருந்தார்கள். என் இடத்திற்குச் செல்வதற்கு என்னிடமே வசூலிப்பதா என்று கோபமாகக் கூறி, சாமி திரும்பிச் செல்ல ஆரம்பித்தார்கள். எங்கள் மாமா திரு. அருணகிரிநாடார் சாமியைக் கெஞ்சிக்கூத்தாடி அழைத்து வந்தார்கள். சந்நிதிக்குள் அண்ணாமலையாரை ஆனந்தமாகத் தரிசனம் செய்ய முடிந்தது. சாமி சிவாச்சாரியார்களிடம் மிகவும் மரியாதை காட்டினார்.

ஒரு முறை அண்ணாமலையாரையும், உண்ணாமுலை அம்மனையும் ஆனந்தமாக தரிசனம் செய்ய வைத்து, எங்களை அழைத்துக்கொண்டு சம்பந்தவிநாயகர் சந்நிதிக்குமுன்னால் உள்ள திறந்தவெளியில் அமர்ந்தார். எங்களையும் தன்னருகில் அமரச்செய்தார். கோயிலுக்கு வந்த பக்தர்கள் சாமியின் எதிர்பாராத தரிசனத்தில் ஆனந்தமடைந்து சாமியை வணங்கிச்சென்றார்கள். அங்கு ராம்ஜி என்று ஹிந்தி எழுத்தில் கல்தளத்தில் செதுக்கப்பட்டிருப்பதைச் சுட்டிக் காட்டினார்கள்.

நாடார் லாட்ஜில் நாங்கள் தங்கினால் அதிகாலையே சாமி அங்கு வந்துவிடுவார்கள். பின் இரவு ராஜசேகர்ஜி சந்நிதித்தெரு இல்லத்தில் சாமியைவிட்டு விட்டு வருவார். மறுநாளும் காலையே வந்துவிடுவார்கள். பின் நாங்கள்புறப்படும் நேரம் வரை நாடார் லாட்ஜிலேயே தங்கி ஆசிர்வாதம் செய்து, பிரசாதங்கள் எல்லாம் தந்து, தானும் காரில் ஏறிக்கொண்டு, தான் சந்நிதித்தெரு இல்லத்தில் இறங்கிக்கொண்டு, நாங்கள் தெருமுனை திரும்பும் வரை ஆசிர்வாதம் செய்தபடி நின்று வழியனுப்புவார்கள். 1988ம் வருடம் டிசம்பர் மாதம் குமாரவேலுடன் நானும் ராஜசேகர்ஜியும் அண்ணாமலை சென்றோம். லம்போதரன் தாவண்கெரேயில் இருந்தான்.

2 நாட்கள் சாமியுடன் ஆனந்தமாகக் கழிந்தன. மதுரைக்குப் புறப்படுவதற்கு முன் பிரசாதங்களையெல்லாம் அன்புடன் கொடுத்து ஆசிர்வதித்து, வாருங்கள் அருணாச்சலேஸ்வரர் கோயிலுக்குச் செல்வோம். இந்த பிச்சைக்காரன் அங்கிருந்து உங்களுக்கு விடை கொடுப்பான் என்று சொல்லி, காரில் அழைத்துச் சென்றார்கள். நடமாடும் அருணாச்சலேஸ்வரருடன், லிங்கேஸ்வர அருணாச்சலேஸ்வரரை தரிசிக்கச் செல்கிறோம் என்ற பெருமித உணர்வுடன் உள்ளம் விம்ம ஆலயத்திற்குள் சென்றோம். சாமி ஒரு குழந்தையாகவே மாறிவிட்டார்கள். கோபுரவாசலில் பெரியபடிக்கட்டை மிதிக்காமல் நான் தாண்டிச் செல்வதைப் பார்த்து விட்டு, தன் அழகிய வெண்தாடியைத் திருக்கரத்தால் பற்றிக் கொண்டு "ஓ" என்று சொல்லி தானும் அதேமாதிரி தாண்டினார்கள். ஸ்வாமியை தரிசித்தபின், தக்ஷிணாமூர்த்தி சந்நிதிமுன் சிறிதுநேரம் கண்ணைமூடி நான் அமரவும், பழையபடியே ஓ என்று சொல்லிக்கொண்டு தானும் அமர்ந்தார்கள். நவக்கிரகத்தை சுற்றும் போது தானும் சுற்றினார்கள். பின் எங்கள் மூவரையும் வெளிப்பிரகாரத்தைச் சுற்றுவதற்கு அழைத்துச் சென்றார்கள். ஸ்தல விருக்ஷத்தை வணங்கிவிட்டு, பிரகாரத்தை வலம் வந்து கொண்டிருக்கும் போது, அங்கிருந்த திண்ணையில் சிவப்பழமாக ஒரு வயோதிக வேதியர் வேதமந்திரங்களைக் கூற, எதிரே பிரம்மச்சாரிகள் அமர்ந்து திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். சாமி குடுகுடுவென்று அந்த இடத்திற்குச் சென்றார்கள். முகத்தில் பரவசம் பிரகாசிக்க, மிகவும் பணிவோடு அந்த வயோதிக வேதியரை வணங்கியபடி நின்றார்கள். தரையில் விழுந்து சாஷ்டாங்கமாக அவரை நமஸ்கரித்தார்கள். அதைக் கண்ட அந்த முதியவேதியர் பதறி விட்டார். சாமி தாங்களே கடவுள், தாங்கள் இப்படிச் செய்யலாமா என்று துடிதுடித்தபடி கேட்டார். அதை மறுத்து தலையாட்டியபடி எழுந்துநின்ற சாமி, ஆகாயத்தை நோக்கி

சுட்டிக்காட்டினார்கள். அந்நேரம் சாமியின் திருமுகத்தில் தோன்றிய ஒளியையும் பரவசத்தையும் வார்த்தைகளால் வர்ணிக்கவும் முடியுமா? மிகவும் அன்புடனும், பணிவுடனும் அந்த வேதியருக்கு தக்ஷணை கொடுத்துவிட்டு அங்கிருந்து நகர்ந்தார்கள். நாங்களும் பின் தொடர்ந்தோம். பிரகாரம் திருப்பத்தில் எங்கள் மூவரையும் அமரச் செய்து, தானும் அமர்ந்தார்கள். அங்கிருந்து தெரிந்த திருவண்ணாமலையின் உச்சியையே பார்த்துக்கொண்டு இருக்கும்படி சொன்னார்கள். சிறிது நேரம் சென்றபின் திலகவதி ஏதாவது ஒரு லீலை சொல் என்றார்கள். "உலவாக்கிழி அருளிய லீலையைச் சொ்ன்னேன். அந்த லீலையில் சுந்தரேசப்பெருமான் வேதத்தின் மகிமையையும், வேதியர்களின் உயர்வையும் எடுத்துச்சொல்வார். லீலையை மிகவும் அனுபவித்துக் கேட்டார்கள். பின் கார்வரை வந்து எங்களுக்கு ஆசி கூறி விடையளித்து, தங்கள் பயணம் ஆனந்தமாக இருக்கட்டும். சுகமாக வீடு திரும்பியதும் இந்த பிச்சைக்காரனுக்கு 2 வரி எழுதுங்கள் என்று சொல்லி அனுப்பிவைத்தார்கள்.



## சிவபூஜை தந்தருளிய லீலை

1988ம் ஆண்டு நாங்கள் மூன்று சகோதரிகளும், குருபூர்ணிமா அன்று சாமியின் சந்நிதானத்தில் இருக்கவேண்டுமென்று ரயிலில் திருவண்ணாமலை கிளம்பினோம். அதுதான் முதல்முறையாக வீட்டுக்கார் துணை இல்லாமல் சாமியிடம் தனியாகச் செல்வது. மனதிற்குள் ஒரு நடுக்கம். தனியாக ஏன் வந்தீர்கள் என்று கேட்டு வாசலிலேயே திருப்பி அனுப்பி விடுவார்களோ என்ற பயம். நாடார் லாட்ஜில் ரூம் போட்டு விட்டு தயக்கத்துடன் சென்றோம். சந்நிதித்தெரு இல்லத்தில் வராந்தாவிலேயே சாமி அமர்ந்திருந்தார்கள். எங்களைப் பார்த்ததும் முகத்தில் புன்சிரிப்பு. How did this conspiracy happen? (எப்படி இந்த சதித்திட்டம் உருவாகியது) என்றார்கள். மனம் இலேசாகியது. வெகுநேரம் இனிமையாக ஸ்ரீராமா ஜெயராமா ஜெய ஜெய ராமா என்று பாடினார்கள். இந்த புனிதமான பாரத பூமியில் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக ராமநாமம், கிருஷ்ணநாமம், சிவநாமம் ஒலித்துக் கொண்டே இருக்கிறது. நம் ஆயுள் உள்ளவரை எத்தனை முறை ஆனாலும் ஸ்ரீமத் பாகவதம், ராமாயணம், மகாபாரதம், திருவிளையாடற்புராணம் படிப்பது எல்லோருக்கும் நல்லது என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினார்கள். 7 sisters என்று அழைக்கப்படும் பறவைகள் சேர்ந்தே இருக்கும். அது மாதிரி நீங்கள் 3 சகோதரிகளும் என்றார்கள். திருவிளையாடற்புராணம் சொல்லச் சொன்னார்கள். உலவாக்கிழி கொடுத்தபடலம் சொன்னேன். மறுநாள் வியாழக்கிழமை. குருபூர்ணிமா தினம். காலையிலேயே சாமி தரிசனம். அன்புடன் உள்ளே அழைத்து அமரச் செய்தார்கள். உள் அறைக்குள் சென்று விவேகானந்தரின் "கொலம்பியாவிலிருந்து அல்மோராவுக்கு" என்ற புத்தகத்தை எடுத்து வந்து, அதில் "இந்தியாவின் ரிஷிகள்" (sages of india) என்ற பகுதியை என்னையும், அடுத்து உமாவையும் வாசிக்கச்

சொன்னார்கள். நாங்கள் வாசித்துக் கொண்டிருந்தபோது மாதேவகியும் சுஜாதாவிஜயராகவனும் வந்தார்கள். அன்று தான் நாங்கள் மாதேவகியை முதல்முறையாகப் பார்த்தோம். அவர்கள் இருவரும் சாமியை "பகவான் பகவான்" என்று அழைத்ததைக் கேட்க மிகவும் ஆனந்தமாக இருந்தது. செல்வி. சுஜாதாவிஜயராகவன், "இந்தியாவில் ஆன்மீக மறுமலர்ச்சி" என்ற புத்தகம் எழுதியிருந்தார்கள். எங்களை அதிலிருந்து சில பகுதிகளை வாசிக்கச்சொன்னார்கள். மாலை தரிசன நேரத்தில் பல லீலைகளைச் சொல்ல சொன்னார்கள். வளையல் விற்ற லீலையை ராகத்துடன் பாடச் சொன்னார்கள். உமாவையும் சாரதாவையும் வாசிக்கச் சொன்னார்கள். பெருவழுதி என்ற பெயரில் வரும் பாண்டியன் சம்பந்தப்பட்ட லீலை எதையாவது கூறு என்றார்கள். உக்கிரப்பெருவழுதியின் "இந்திரன் முடிமேல் வளை எறிந்த படலம்" சொன்னேன். அதில் சோமவாரவிரதத்தின் மகிமைகளை உயர்வாகச் சொல்லி இருக்கும். நீங்கள் சோமவார விரதம் அனுஷ்டிப்பதுண்டா என்று கேட்டார்கள். நாங்கள் அனுஷ்டிப்பதில்லை. ஆனால் அம்மா சோமவாரவிரதத்தை சிரத்தையுடன் கடைபிடிப்பார்கள் என்று சொன்னோம். "திலகவதி, இனிமேலிருந்து நீயும் சோமவாரவிரதம் கடைபிடிக்க வேண்டும்" என்றார்கள். அம்மாவை அழைத்துக்கொண்டு எங்கள் அண்ணன் ஞானகிரி கணேசன் வந்தார். அம்மாவைப் பார்த்ததும் சாமிக்கு அவ்வளவு ஆனந்தம். அம்மாவுடைய ஆன்மீகச் சொத்து சிவ பூஜை. அது அவருடைய குழந்தைகளுக்குச் செல்ல வேண்டும். அம்மா மறுப்பேதும் சொல்லாமல் மூன்று சகோதரிகளுக்கும் சிவபூஜை உபதேசம் செய்ய வேண்டும். சிவபூஜை செய்யும் முறையை தெளிவாக விஸ்தாரமாகப் படித்துக் கொள்ள வேண்டும். இப்போது முடியாவிட்டாலும் *10,15* வருடங்கள் சென்ற பிறகாவது பண்ண வேண்டும். மானசீக பூஜையாக வேண்டுமானாலும் பண்ணலாம். திலகவதி, நீ குளிக்காவிட்டாலும்

பரவாயில்லை. சிவபூஜை பண்ணலாம். தினமும் அவருக்கு ஒரு லீலை சொன்னால் போதும் என்று சொல்லிவிட்டு, இதற்காகத்தான் இந்த பிச்சைக்காரன் மூன்று சகோதரிகளையும் ஐந்து நாட்கள் தங்க வைத்துக் கொண்டான் என்றார்கள். ஐந்து நிமிட தரிசனம் கிடைக்குமா என்று ஏங்கி வந்த எங்களுக்கு, சாமியுடன் ஐந்து நாட்கள் இருக்கும் பாக்கியம் கிட்டியது.

ஊர் திரும்பியவுடன் சிவபூஜைக்கு உண்டான பாத்திரங்களுக்கு ஆர்டர் கொடுத்தோம். அடுத்த பௌர்ணமியில் அம்மாவிடமிருந்து மூவரும் சிவபூஜைக்கான தீக்ஷை பெற்றுக்கொண்டோம். சாமியே என்னை சிவபூஜை செய்யச்சொன்னதால் அம்மா அவர்கள் பூஜித்து வந்த சிவலிங்கத்தை (சுந்தரேசப்பெருமான். அம்மா மதுரை ஆதினத்திடமிருந்து மீனாட்சி, சுந்தரேசரைப் பூஜை செய்யும் சிவபூஜை தீக்ஷை வாங்கியிருந்தார்கள்.) எனக்குத் தருவதாக ஒப்புக் கொண்டார்கள். அடுத்தமுறை எங்கள் குடும்பம் மட்டும் அண்ணாமலை சென்றிருந்தோம். சாமி என்னிடம், திலகவதி இந்த பிச்சைக்காரன் உன்னிடம் சிவபூஜை செய்யுமாறு சொல்லிவிட்டேன். ஆனால் ராஜசேகர்ஜி இதற்கு ஒத்துக்கொள்வாரா என்று கேட்டார்கள். அம்மா எங்கள் வீட்டிற்கு வரும்போது சுந்தரேசப்பெருமானையும் கொண்டுவருவார்கள். அவர்கள் பூஜை செய்யும் போது கேட்கும் மணிசப்தம் ராஜசேகர்ஜிக்கு மிகவும் பிடிக்கும் என்றேன். உடனே பூஜைமணி ஒலியின் இனிமையான சப்தம் பற்றி ரவீந்திரநாத்டாகூர் எழுதிய வங்காளப்பாடலை இனிமையாகப் பாடினார்கள். அம்மா சிவபூஜைக்காக வைத்திருக்கும் பாத்திரங்களை யாருக்குக் கொடுக்கப் போகிறார்கள் என்று கேட்டார்கள். என் தங்கை உமாமகள் சுஜாதா சிறுவயதில் அம்மாவிடம் வளர்ந்தாள். அவர்கள் பூஜை செய்யும்போது தானும் அருகில் அமர்ந்துகொண்டு அம்மா செய்வதைப் போலவே செய்வாள். ஆகவே அம்மா

சிவபூஜை பாத்திரங்கள் எல்லாம் சுஜாதாவுக்குத்தான் என்று சொல்லிக்கொண்டே இருப்பார்கள். ஆகவே சாமியிடம் சுஜாதாவிற்கு கொடுப்பார்கள் என்று சொன்னேன். திலகவதி, சுந்தரேசப்பெருமானுடன் பூஜாபாத்திரங்களும் உனக்குத்தான் என்று அம்மாவிடம் கேள். அம்மா கொடுக்கமறுத்தால் சுந்தரேஸ்வரரும் வேண்டாம் என்று சொல்லிவிடு. ஆனால் இந்தப்பிச்சைக்காரன் இதைச் சொன்னான் என்று மட்டும் அம்மாவிடம் கூறி விடாதே என்றார்கள். சுஜாதா தன்னுடைய சேவையினால் அம்மாவை மிகவும் திருப்திபடுத்தியிருக்க வேண்டும் என்று சொன்னார்கள். ஊர்திரும்பியவுடன் அம்மாவிடம் பூஜா பாத்திரங்களும் எனக்கு வேண்டும் என்று கேட்டேன். அது சுஜாதாவுக்கு என்று திட்டவட்டமாகச் சொல்லி விட்டார்கள். மூன்று முறை கேட்டேன். மூன்று முறையும் அதே பதில் தான். எப்பொழுதும் சாமி சொன்னால் அதை அப்படியே கேட்கும் நான், என்னை மறந்து சாமி சொன்னதை மீறி, அம்மா சாமிதான் இவ்வாறு கேட்கச் சொன்னார்கள் என்று சொல்லிவிட்டேன். அம்மா பதறி விட்டார்கள். பாப்பா (அம்மா என்னை அவ்வாறு தான் அழைப்பார்கள்) பூஜா பாத்திரங்களும் உனக்குத் தான் என்று கூறி விட்டார்கள். நான் சாமிக்கு அவருடைய வார்த்தையை மீறி அம்மாவிடம் சாமி சொல்லிதான் கேட்கிறேன் என்று சொன்னதை எழுதி, என்னை மன்னிக்கும்படி கடிதம் எழுதினேன். சிலவருடங்கள் சென்ற பின் அம்மா மானசீகபூஜை மட்டுமே செய்துவந்ததால், 1993ம் வருடம் சிவராத்திரி அன்று சுந்தரேஸ்வரரையும் பூஜா பாத்திரங்களையும் சிவகாசியில் குமாரவேலு வீட்டில் வைத்துக் கொடுத்தார்கள். சிவராத்திரியன்று குமாரவேலு வீட்டில் அம்மாவின் சுந்தரேஸ்வரருக்குப் பூஜை செய்தேன். இன்று அவருடைய கர்ப்பகிரகத்தில் கனகம்பீரமாக அருளாட்சி செய்து கொண்டிருக்கிறார்.

சாமி ஒருமுறை என்னிடம், "திலகவதி நீ சுந்தரேஸ்வரரை பூஜை செய்கிறாய். பின் ஏன் இந்த பிச்சைக்காரனின் நாமாவைக் கூறுகிறாய்" என்று கேட்டார்கள். சாமி, சுந்தரேஸ்வரரை யோகிராம்சுரத்குமார் என்ற பெயரிட்டு அழைத்தால், அவர் எனக்கு மிகவும் நெருக்கமானவராக இருப்பதாக உணர்கிறேன் என்றேன். சாமி என்கைகளைத் தன் கைகளில் எடுத்துக் கொண்டு கண்களில் ஒற்றிக் கொண்டார்கள். அச்சமயம் மலர்க்குவியலுள் என் கைகள் இருப்பது போல் உணர்ந்தேன்.



## எல்லாம் வல்ல பெம்மானின் லீலை

புன்னைமரத்தடியை இன்று நினைத்தாலும் ஆனந்தமாக இருக்கிறது. உச்சிவெயிலிலும், சூரியனின் ஒளிக்கதிர்கள் உள்ளே நுழையாமல், குளுகுளுவென்று இருக்கும். அருகில் வாய்க்காலில் சலசலவென்று தண்ணீர் ஓடி, பாத்திகளில் பாய்ந்து கொண்டிருக்கும். சாமி நாமாவை ஆனந்தத்துடன் கூறக்கூடிய பாக்கியம் கிடைத்ததும் அங்கு தான். ஒருநாள் புன்னை மரத்தடியில் சாமி நாமாவை ஆனந்தத்துடன் பாடிக் கொண்டிருந்தேன். சாமி எங்கள் முன்னால் அமைதியாக வீற்றிருந்தார். பின் என்னைப்பார்த்து "என் தந்தை இந்த பிச்சைக்காரன் பணிகளில் உதவி புரிவதற்காக பத்து பேரை அனுப்பியுள்ளார். அதில் நீயும் ஒருத்தி," என்றார்கள். ஒன்றும் தெரியாத எளியவளிடம் சாமிக்கு இவ்வளவு அன்பும், கருணையுமா. அண்ணாமலை குடிகொண்ட அருள்மலை அவர்.

புன்னை மரத்தடியில் இருந்த போது சாமி தான் பாரததேசம் முழுவதும் சஞ்சாரம் செய்ததைப்பற்றி கூறிக் கொண்டிருந்தார்கள். ஏழு வருஷம் அவ்வாறு சஞ்சாரம் பண்ணிய போது, கல்கத்தா பேலூர் மடத்தில் பகவான் ராமகிருஷ்ண பரமஹம்ஸர் திருஉருவச்சிலைக்கு முன்னால் பெற்ற ஆனந்தம் வேறெங்கும் கிடைக்கவில்லை. இந்த பிச்சைக்காரன் அந்தப்புனிதமான சந்நிதானத்தில் கீழே விழுந்து உருண்டு புரண்டான் என்று சொன்னார்கள். அதிலிருந்து எனக்கு கல்கத்தா சென்று ராமகிருஷ்ணமடம் செல்லவேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது. ஆனால் அதற்கான வாய்ப்பு சாமி சித்தி அடைந்தபின் 2003ம் ஆண்டுதான் கிடைத்தது. அதுவும் ராமகிருஷ்ணமடத்து அன்பர்களுடன் சென்றதால், காமாபுகூர், ஜெயராம்பாடி என்று பகவான் சம்பந்தப்பட்ட எல்லா இடங்களையும் நிதானமாக ஆனந்தமாக தரிசிக்க முடிந்தது. பகவானுக்கு ஏழுவயதில் முதன்முதலில் சமாதி அநுபவம் ஏற்பட்ட வயல்வெளி,

சிவராத்திரியன்று சிவனாக வேடமிட்டு நடித்த நாடகமேடை, அவர் பெண்வேடமிட்டு ஏமாற்றி தங்கியிருந்த வீடு என்று உள்ளமெல்லாம் இனிக்க இனிக்க நானும் என் தங்கை சாரதாவும் அநுபவித்தோம். தக்ஷிணேஸ்வரர் கோயிலில் பகவான் தங்கியிருந்த அறையில் சிறிது நேரம் அமரக்கூடிய பாக்கியம் கிடைத்தது. இந்த வாசல் வழியாகத் தானே விவேகானந்தர் வேகமாக உள்ளே புகுந்திருப்பார். கடவுளைக் கண்டதுண்டா என்று பகவானைக் கேட்டிருப்பார். தன் அருமை நரேனை பகவான் எவ்வளவு பாசத்துடன் ஏற்றுக்கொண்டிருப்பார் என்ற எண்ணங்கள் மனதில் ஓடியது. சாமிநாமாவை மனதிற்குள் சொல்லிக் கொண்டு, கண்ணை மூடி சிறிதுநேரம் அமர்ந்திருந்தேன். 'Tilakavati this beggar loves you' என்று சாமியின் மதுரமான குரல், மிக மிக மிக மிக இனிமையாக என் காதுகளில் ஒலித்தது. இந்த கருணைக்கு எப்படி நன்றி சொல்ல முடியும்.

புன்னைமரத்தடியில் ஒருமுறை உடுக்கையின் நாதம் போல் குரல் எழுப்பினார்கள். ஒரு மனித நாக்கிலிருந்து அப்படி ஒலி எழுப்புவதென்பது இயலாத காரியம். பிரமித்துப்போய் உட்கார்ந்திருந்தோம். பின்னர் ஒருமுறை சந்நிதித்தெரு வீட்டிலும் அதே போன்று குரல் எழுப்பினார்கள்.

1975ம் ஆண்டு தீபத்திருநாளன்று, புன்னைமரத்தடியில், சாமியின் சந்நிதியில் அண்ணாமலையை நோக்கி அமர்ந்தவாறு காலை 10 மணியிலிருந்து, தீபம் ஏற்றும் மாலை 6 வரை "அருணாசலசிவ அருணாசலசிவ அருணாசலசிவ அருணஜடா" என்று கீர்த்தனம் செய்யும் பாக்கியம் அம்மா, உமாவுடன் எனக்கும் கிடைத்தது. In its own mysterious way Mount Arunachala has protected this beggar (அண்ணாமலை தனது விநோதமான வழியில், இந்த

பிச்சைக்காரனை காப்பாற்றியுள்ளது) என்று நா தழுதழுக்க கூறுவார்கள்.

முதன்முறையாக சாமியைத் தரிசனம் செய்தது பாத்திரக்கடை வாசலில். அப்போது சாரதாவை துளசி பூஜை செய்யச் சொன்னார்கள். துளசி பூஜை செய்ததன் பலனால் அவளுடைய பிரச்னையும் தீர்ந்தது, சாமியின் திருவடிகளில் துளசியை சமர்ப்பித்தால், அதை மறுத்து தன் தலையில் வைத்து கண்ணில் ஒற்றிக்கொள்வார்கள். சாமிக்கு துளசி மீது இருக்கும் மரியாதையைப் பார்த்து, நானும் வீட்டில் துளசிமாடம் வைத்து தினமும் காலையும் மாலையும் நமஸ்கரித்து வந்தேன். சாமி சித்தியடைந்து சில வருடங்கள் சென்று விட்டன. எங்கள் வீட்டுத் துளசிமாடத்திலிருந்த துளசிச்செடியில் வாடிய இலைகளும் கிளைகளும் ஆங்காங்கே தென்பட்டன. அவற்றை வெட்டி அகற்றிவிட்டால், செடி ஒரே பசுமையாக அழகாக இருக்குமே என்று நினைத்து கத்தரிக்கோலை எடுத்து வந்தேன். திருவிளையாடல் புராணத்தில் சுந்தரேசப்பெருமான் அசரீரியாக பக்தர்களுடன் பேசியதாகப் பல லீலைகளில் வரும். கத்தரிக்கோலை எடுத்துக் கொண்டு துளசியை நெருங்கியது தான் தாமதம், 'Tilakavathi don't do that' (திலகவதி அப்படிச் செய்யாதே) என்று சாமியின் குரல் கேட்டது. நடுநடுங்கிப் போய் விட்டேன். அதன் பின் துளசியின் மேல் மரியாதையும், பக்தியும் மேலும் கூடியது.

ஒரு மார்கழி மாதம் எங்கள் குடும்பமும் உமா குடும்பமும் அண்ணாமலை சென்றோம். அந்த முறை பார்க் ஹோட்டலில் தங்கி இருந்தோம். முதல்நாள் முழுவதும் புன்னை மரத்தடியிலும், தேரடி மண்டபத்திலும்,

பாத்திரக்கடை வாசலிலும் சாமியுடன் ஆனந்தமாகப் பொழுது கழிந்தது. மறுநாள் காலையில் குழந்தைகள் நன்றாக தூங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களை எழுப்பாது திரு. சுரேந்திரனை துணைக்கு வைத்துவிட்டு, ராஜசேகர்ஜி, நான், உமா மூவரும் குளித்துவிட்டு அதிகாலை 5 மணிக்கு சாமியைப் பார்க்க கிளம்பினோம். சாமி பாத்திரக்கடையில் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களைத் தொந்தரவு செய்யாமல், திருவெம்பாவை இயற்றப்பட்ட தலத்தில் மார்கழி மாதம் அண்ணாமலையாரை தரிசிப்போம் என்று திருக்கோயில் சென்றோம். சாமியையும், அம்மனையும் ஆனந்தமாகத் தரிசித்தபின் திரும்பி வரும்போது கொடிமரத்தருகே சாமி அமர்ந்திருப்பதைப் பார்த்தோம். சாமியைப் பார்த்த உற்சாகத்தில் சிறுகுழந்தைகளைப்போல் நானும், உமாவும் துள்ளிக்குதித்து ஓடினோம். ராஜசேகர்ஜியும் எங்கள் பின்னால் வேகமாக வந்தார். எங்களைப் பார்த்து சாமி சந்தோஷமாகச் சிரிக்க, நாங்களும் சிரிக்க ஒரே ஆனந்தம். சாமியைச் சுற்றி அமர்ந்தோம். சிறிது நேரத்தில் பாத்திரக்கடை வாசலுக்கு அழைத்துச் சென்றார்கள். எங்களைப் பார்த்து புன்னகை செய்தபடியே, மிகவும் இனிமையாக இந்தி மொழியில் ஒரு பாட்டு பாடினார்கள். இந்தப்பாடல் துளசி ராமாயணத்தில் வருகிறது. இதன் பொருள் அதிகாலை வேளையில் குழந்தைராமனை கையில் ஏந்திக்கொண்டு, தசரதச் சக்கிரவர்த்தி நந்தவனத்தில் உலாவிக் கொண்டிருக்கிறார். அந்த வழியே சென்ற இரண்டு பெண்கள் அந்த இளங்காலைப் பொழுதில் இக்காட்சியைக் காண்கிறார்கள். அவர்கள் தான் எவ்வளவு பாக்கியசாலிகள்" என்று சொல்லி மறுபடியும் அந்தப் பாடலைப் பாடினார்கள். தெய்வக்குழந்தையின் திவ்யதரிசனம் அதிகாலை வேளையில் கிடைத்த ஆனந்தத்தில் நாங்கள் திக்கு முக்காடிப் போனோம். "காபி சாப்பிடுவோமா" என்று கேட்டு எங்கள் மூவரையும் உடுப்பி ஹோட்டலுக்கு அழைத்துச் சென்றார்கள். நால்வரும்

காபி சாப்பிட்டோம். இன்னொரு கப் காபி குடிப்போமா என்று கேட்டு, ஆர்டர் பண்ணினார்கள். சாமியுடன் சேர்ந்து இன்னொரு கப் காபி அருந்தும் பாக்கியம் கிடைத்தது. அங்கிருந்து அருகிலிருந்த பூ மார்க்கெட் அழைத்துச் சென்று எனக்கும் உமாவுக்கும் புஷ்பங்கள் வாங்கி கொடுத்தார். உடனே சூடிக்கொண்டோம். எலுமிச்சம்பழம் வாங்கிக் கொடுத்தார். பழையபடி பாத்திரக்கடை வாசல் அடைந்தோம். ராஜசேகர்ஜி சாமியை காரில் புன்னைமரத்தடியில் இறக்கிவிட்டு விட்டு, எங்களைக் கூப்பிட வந்தார். நாங்களும் குழந்தைகளை அழைத்துக் கொண்டு புன்னைமரம் சென்றடைந்தோம்.

1976, டிசம்பர் 1ம் தேதி சாமி ஐயந்திக்காக எங்கள் குடும்பமும், உமா குடும்பமும் நவம்பர் 30ம் தேதி மாலை திருவண்ணாமலை புறப்பட்டோம். திருச்சியில் அஜந்தா ஹோட்டலில் இரவு 7 மணிக்கு உணவருந்தச் சென்றோம். உணவுக்கு ஆர்டர் கொடுத்து விட்டு காத்திருந்த நேரத்தில், ராஜசேகர்ஜி, நான், உமா மூவருமாக ஒரு பேப்பரில் சாமிக்கு "ஹேப்பி பர்த்டே டு யூ" என்று ஆரம்பிக்கும் பிறந்தநாள் வாழத்துப்பாடல் எழுதினோம். அண்ணாமலை சென்றடைய இரவு 10 மணிக்கு மேலாகிவிட்டது. தீபத்திருவிழாவிற்காக அம்மா ஏற்கெனவே திருவண்ணாமலை வந்து சுப்பையாமடத்தில் தங்கி இருந்தார்கள். (சுப்பையா நாடார் எங்கள் அம்மாவின் தந்தையார். அண்ணாமலையார் மீது அதீத ஈடுபாடு கொண்டு, தீபத்திருநாளின் போது குடும்பத்தார் அனைவரும் வந்து தங்குவதற்காக அண்ணாமலையில் மடம் கட்டியிருந்தார். திருவண்ணாமலையிலேயே தங்கி, மரணம் அடைந்தார். அவர் சமாதி திருவண்ணாமலையில் இருக்கிறது.) அம்மா சுப்பையாமடத்துக்கு வந்தால் சாமியும் வந்துவிடுவார்கள். சாமி சுப்பையாமடத்தில் எங்களுக்காக காத்துக்கொண்டிருந்தார்கள். சாமியை வணங்கி அமர்ந்தோம். சாமி எங்களுடன் உற்சாகமாக உரையாடிக்

கொண்டிருந்தார்கள். நாங்கள் குறுகுறுப்புடன் நள்ளிரவு 12 மணிக்காக காத்திருந்தோம். சரியாக 12 மணி ஆனவுடன் நாங்கள் அனைவரும் ஒன்றாக,

Happy Birthday to you (2)
Happy Birthday Dear Swamiji
Happy Birthday to you

We are your children
You are our father
Your Blessings we want Swamiji
Your Blessings we want (Happy)

You are here in Annamalai
You are always in our heart
You are everywhere in this world
You are everywhere swamiji (Happy)

You are dear to us
You are near to us
You are everything to us Swamiji
you are everything ot us (Happy)

We should love you always
We should remember you always
We should serve you always Swamiji
We should serve you always (Happy)

என்று பாட ஆரம்பித்தோம். சாமிக்கு ஆச்சரியம் கலந்த மகிழ்ச்சி. கையை வீசியும், கைகளை உயர்த்தியும் ஆசிர்வாதம் செய்து கொண்டே இருந்தார்கள். பாடி முடித்தவுடன் 'Repeat' (மறுபடியும்) என்று சொல்லி பாட வைத்தார்கள். சாமியின் சிரிப்பு அனைவரும் அறிந்ததே. அலை அலையாகப் பரவும் அந்த அற்புதமான வெடிச்சிரிப்புடன் எங்கள் பாட்டும் தொடர்ந்தது. சாமி எத்தனைமுறை மறுபடிய்யும் என்று சொன்னார்கள், நாங்கள்

எத்தனைமுறை பாடினோம் என்பதை எங்களால் எண்ண இயலவில்லை. வாங்கிச் சென்றிருந்த சாக்லேட் பாக்கெட்டை சாமிக்கு சமர்ப்பித்தோம். அனைவருக்கும் கொடுத்தார்கள். ஒரு வாரம் அந்த ரூமில் சாமியுடன் இனிமையாகப் பொழுது கழிந்தது. திருவிளையாடல்-புராணம் படித்து கதை சொல்லச் சொல்வார்கள். ஒரு வாரம் உணவை மறந்து உறக்கத்தை மறந்து, பல்துலக்காமல், குளிக்காமல் சாமியுடனே இனிதாக பொழுது கழிந்தது. நடுநிசியில் கீழே வீதியில் பஞ்சமூர்த்திகளின் ஊர்வலத்தின் போது நாதசுர இசை கேட்கும். சாமி எங்களை அழைத்துச் சென்று பால்கனியிலிருந்து தரிசனம் செய்து வைப்பார். தீபத்தன்று நானும் தங்கை உமாவும் தீபஜோதியாய் வருவாய் என்றுபாடி, சாமியை மொட்டைமாடிக்கு அழைத்துச் சென்று, அங்கு அமரச் செய்தோம். அங்கிருந்து மலைஉச்சி மிகவும் அருகாமையில் காணப்பட்டது. தீப தரிசனம் கிடைத்தவுடன், சுப்பையாமடத்தில் பிரசாதம் உண்டபின் சாமியிடம் பிரியாவிடை பெற்றுச் சென்றோம். ஊர்வந்தவுடன் சுப்பையாமடத்து நினைவுகளே மனதில் ஓடியது. சாமிக்குக் கடிதம் எழுதினேன். அப்பொழுது சந்நிதித்தெரு வீடு வாங்கவில்லை. ஆகவே திரு.சங்கரன் என்ற போஸ்ட்மாஸ்டர் விலாசத்திற்கு கடிதம் எழுதுவோம். ஒரு வாரம் கழித்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. உள்ளே பிரித்து பார்த்தால் சாமி கையெழுத்தில் எனக்கு கடிதம். அது தான் சாமி எனக்கு எழுதிய முதல் கடிதம். சாமியின் கருணையை எண்ணி எனக்கு அழுகையே வந்து விட்டது. பின்னர் ராஜசேகர்ஜி வேலூருக்குச் செல்லும் வழியில் தரிசனத்திற்குச் செல்லும் போது, அவரிடம் எனக்கு கடிதம் எழுதி கொடுத்தனுப்புவார்.

சாமி புன்னை மரத்தடியிலும், பாத்திரக்கடை வாசலிலும், தேரடிமண்டபத்திலும், வெயில் மழை என்று பாராமல், ஒரு வசதியுமில்லாமல், இரவும் பகலும் பக்தர்களுக்காகத் தன்னை வருத்திக் கொள்கிறாரே என்று

என் தங்கை உமா புலம்புவாள். பல சமயங்களில் கண்ணீர் விடுவாள். சாமிக்கென்று தனியாக ஒரு வீடு இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்பாள். ராஜசேகர்ஜி எனக்கு வீட்டுச்செலவுக்கு கொடுக்கும் பணத்தில் தினமும் முதலில் 1 ரூபாய் எடுத்து தனியாக வைத்து விடுவேன். சுப்பையாமடத்தில் அ.சா.ஐயாவின் மணிவிழா நடந்தது. திரு. ராஜமாணிக்க மாமா அவர்கள் சந்நிதித் தெருவில் வீடு வாங்குவதைப்பற்றி சாமியிடம் பேசிக் கொண்டிருந்தார்கள். நான் ஒவ்வொரு ரூபாயாகச் சேர்த்த பணம் ரூ153 சேர்ந்திருந்தது. நான் தயங்கி தயங்கி சாமியிடம் விண்ணப்பித்தேன். திரு. ராஜமாணிக்கமாமா அவர்களிடம் கொடுக்கச் சொன்னார்கள். பல்லாயிரக் கணக்கில் செலவழித்து வீடுவாங்கும் போது, இவ்வளவு சிறிய தொகையைக் கொடுக்கிறோமே என்று நான் வெட்கப்பட்டுக் கொண்டு பணத்தை கொடுக்க, மாமா அவர்கள் நான் ஏதோ கோடிரூபாய் கொடுப்பதுபோல் அன்புடன் வாங்கி, தலைமேல் வைத்து ஏற்றுக்கொண்டார்கள்.

அதற்குப் பின்னரும் தினமும் 1 ரூபாயாகச் சேமித்து வந்தேன். அண்ணாமலை செல்லும் சமயம் அதை சாமியிடம் சேர்ப்பேன். ஒருமுறை திலகவதியுடையது அனைத்தும் இந்த பிச்சைக்காரனுடையதே. தேவையிருக்கும் போது வாங்கிக் கொள்வேன் என்று சொல்லிவிட்டார்கள். அதிலிருந்து தனியாக ரூபாய் எடுத்து வைக்கும் பழக்கத்தை விட்டுவிட்டேன்.

நாங்கள் முதலில் சந்நிதித்தெரு இல்லத்திற்கு சாமி குடிபுகுந்த சில தினங்களில், 1977 மார்ச் 12ம் தேதி சென்றோம். அப்போது சாமியுடனேயே சந்நிதித்தெரு வீட்டில் தங்கியிருப்போம். எப்போது சென்றாலும் சாமிக்காக சப்பாத்தி, சாம்பார், புளியோதரை, தயிர்சாதம், வெங்காயச்சட்னி, கொத்தமல்லித்துவையல், ஊறுகாய் எடுத்துச் செல்வேன். எதிர்பார்த்து காத்திருப்பது போல்,

வரிசையாக எல்லோருக்கும் இலைபோட்டு, தனக்கும் இலைபோடச் சொல்லி என்னை பரிமாறச் சொல்வார்கள். எல்லோரும் சாப்பிட்டபின் தான்சாப்பிட்ட இலை முன் என்னை அமரச்செய்து ராஜசேகர்ஜியை பரிமாறச் சொல்வார்கள். அதுதவிர ஏற்கெனவே அங்கிருக்கும் பக்தர்கள் கொடுத்த பழங்கள் போன்றவற்றை தன் கையால் தானே வைப்பார்கள். வயிறு நிரம்பி வெடிப்பது போல் இருக்கும். ஆனாலும் சாமி வைக்க வைக்க மறுப்பேதும் சொல்லாமல் சாப்பிட்டு விடுவேன். இந்த லீலை நாங்கள் சந்நிதித்தெரு இல்லத்திற்குப் போகும் ஒவ்வொரு தடவையும் நடக்கும்.

சந்நிதித்தெரு இல்லத்தில் 64 லீலைகளைக் கூறி முடித்த பின்பும் ஒவ்வொரு முறையும் லீலைகளைச் சொல்லச் சொல்லி கேட்பார். சாமி அதிகம் விரும்பிக் கேட்ட லீலை வளையல் விற்ற படலம் ஆகும். வளையல் விற்ற லீலையைத் தினமும் பாராயணம் பண்ணச் சொல்லியிருக்கிறார். அந்த லீலையைப் படித்தால் உள்ளம் புனிதமாகிவிடும் என்று கூறுகிறார். சுந்தரேஸ்வரர் திலகவதிக்கு வளையலிட வருவார். அப்போது இந்த பிச்சைக்காரனும் அங்கு மறைந்திருந்து பார்ப்பேன் என்பார்கள். ஏன் திலகவதி, அந்த காலத்தில் சுந்தரேசப்பெருமான் இவ்வளவு அற்புதலீலைகளையெல்லாம் செய்திருக்கிறாரே. இப்பொழுது அப்படியெல்லாம் செய்வது கிடையாதா என்பார். ஏன் கிடையாது. இப்போதும் வருகிறார். கையில் விசிறி கொட்டாங்கச்சி எல்லாம் வைத்திருப்பார் என்று கூறி எங்களுக்கு நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் சொல்வேன். கதை கேட்கும் சின்னக்குழந்தை மாதிரி "உம்" கொட்டிக் கொண்டு ஆர்வமுடன் கேட்பார். திலகவதி இந்த லீலைகளெல்லாம் நடந்த போது நீ அங்கிருந்தாயா? அப்படியே நேரில் பார்த்தது போல் சொல்கிறாயே என்று உற்சாகப்படுத்துவார். ஒருமுறை மிகவும் படித்த மூன்று பெண்மணிகள் சாமியைப் பார்க்க வந்திருந்தார்கள். மற்ற

மதத்தவர்கள் எவ்வளவு சமூகசேவை செய்கின்றார்கள். இந்துக்கள் அப்படி ஒன்றும் செய்வதில்லை என்றார்கள். அதற்கு சாமி, சுந்தரேசப்பெருமானின் லீலைகளை எடுத்துக்கூறி, மக்களை ஆனந்தப்படுத்துவதை விட பெரிய சமூகசேவை வேறெதுவும் கிடையாது என்றார்கள். திலகவதி, நண்பர்கள் யாராவது உன்னிடம் கேட்டுக்கொண்டால் நீ அவர்களுக்கு சுந்தரேசப்பெருமானது லீலைகளைக் கூற வேண்டும் என்பார்கள். உமாவும், திரு. ஞானகிரி கணேசனும் எப்போது என்னைச் சந்தித்தாலும் ஏதாவது ஒரு லீலை கூறச் சொல்வார்கள்.

2004 ஏப்ரல் மாதம் என் அண்ணன் தர்மராஜா நீரில் சர்க்கரை அதிகமாகி மயக்கம் அடைந்துவிட்டார். அவருக்கு ஏற்கெனவே இருதயநோயும் உண்டு. அவரைப் பார்ப்பதற்காக சிவகாசி சென்றிருந்தேன். என்னுடன் ராஜசேகர்ஜி, ஞானகிரி கணேசன், உமா வந்திருந்தார்கள். அனைவரும் அவர் கட்டிலைச் சுற்றி உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம். என்னைப் பார்த்து, 2 நாட்களுக்கு முன் என்னைப் பார்க்க சாமி வந்திருந்தார் என்றார். கனவில் வந்தார்களா அண்ணா என்று கேட்டேன். இல்லை, இல்லை. நேரிலேயே வந்தார். இப்படி இங்கு வந்து என் கட்டிலில் உட்கார்ந்து கொண்டார். என் கையைப் பிடித்துக்கொண்டு தர்மராஜா உன்னுடைய எல்லா பிரச்சனைகளும் தீர்க்கப்பட்டு விட்டன. உனக்கு இனி கவலைப்பட எதுவும் இல்லை என்று சொன்னார் என்றார். எங்களுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது. இது நடந்த ஒரு வாரத்திற்குள் என் அண்ணன் இயற்கை எய்தி விட்டார். கடைசி பக்தன் வரை இந்த பிச்சைக்காரன் கைபிடித்துக் கரையேற்றுவான் என்று சாமி கூறியது எப்பேர்ப்பட்ட சத்தியவாக்கு.

சந்நிதித்தெரு இல்லத்தில் பல சமயங்களில் பரமாச்சாரியாரின் "தெய்வத்தின் குரல்" புத்தகத்தை வாசிக்கச் சொல்வார்கள். ராஜாஜியின் ராமாயணம்,

மகாபாரதம் நூல்களையும் வாசிக்கச் சொல்லியிருக்கிறார்கள். ஒருமுறை என்னை ஜே. கிருஷ்ணமூர்த்தி எழுதிய புத்தகத்தை வாசிக்கச் சொன்னார்கள். வாசித்து முடித்தவுடன் நீ படித்த விஷயத்தைப் பற்றிக் கூறு என்றார்கள். சாமி, வாசிக்கும் போது எல்லாம் புரிந்ததுபோல் இருந்தது. இப்பொழுது எனக்கு எதுவுமே புரிந்ததாகத் தெரியவில்லை என்றேன். திலகவதிக்கு திருவிளையாடற்புராணம் போதும் என்று சொல்லிவிட்டார்கள். திரு.ஜே. கிருஷ்ணமூர்த்தி சென்னையில் பேசுவதாக இருந்தது. சாமிக்கு அவர் பால் அளவு கடந்த மரியாதை. நண்பர்களெல்லாம் அவர் பேச்சைக் கேட்க வேண்டும் என்று ஆசைப்பட்டார். முருகேஷ்ஜி அங்கு வந்தபோது அவர்மூலம் பக்தர்களுக்கு கடிதம் எழுதச்சொன்னார். ராஜசேகர்ஜி திலகவதிக்கு எழுதலாம் என்று சொன்னபோது, அவர்களைத் தொந்தரவு செய்ய வேண்டாம். அவர்கள் ஏற்கெனவே அந்தப்பாதையில் செல்கிறார்கள் என்று சொல்லிவிட்டார். குமாரவேலு அச்சமயம் சென்னையில் படித்துக் கொண்டிருந்ததால், அவன் ஜே.கே. பேச்சைக் கேட்கச் சென்றான். சாமி மிகவும் சந்தோஷமடைந்தார்கள்.

சாமியும் முருகேஷ்ஜியும் சேர்ந்து இருக்கும் வெகு அற்புதமான புகைப்படத்தை நடேஷ்ஜி எடுத்திருந்தார். முருகேஷ்ஜி அதில் தன்னை நீக்கிவிட்டு சாமி மட்டும் இருக்கும்படியாக, ஒரு பெரிய படமாகத் தயார் பண்ணி எங்களுக்கெல்லாம் கொடுத்திருந்தார். நாங்கள் அண்ணாமலை சென்றபோது அந்த படத்தை எடுத்துச் சென்றிருந்தேன். தான் மட்டும் இருக்கும் அப்படத்தைப் பார்த்தவுடன் சாமி அதிர்ந்துபோய் விட்டார். உங்களுக்கெல்லாம் இதனுடைய முக்கியத்துவம் புரியவில்லை. என்ன செய்வது முருகேஷ்ஜி என்னுடைய ராஜா. இந்த பிச்சைக்காரன் சொன்னால் கேட்கமாட்டார். இந்த பிச்சைக்காரன் பார்த்துவிட்டதால் இந்த புகைப்படம்

மட்டும் இருக்கட்டும். மற்றவர்களிடம் இருப்பதை அழித்துவிடச் சொல் என்று சொன்னார்கள். இது நடந்தபின் ஐந்து மாதங்களில் முருகேஷ்ஜி இறைவனோடு ஒன்றிவிட்டார்.

ஒரு சமயம் சாதுஒருவர் சந்நிதித்தெரு இல்லத்திற்கு வந்திருந்தார். அவர் நேபாளத்திலிருந்து ஒரு பை நிறைய ருத்ராக்ஷ மணிகள் கொண்டுவந்திருந்தார். சாமியிடம் அந்த ருத்ராக்ஷ மணிகள் அனைத்தையும் தருவதற்கு விரும்பினார். சாமி ஏற்க மறுத்துவிட்டார்கள். அதை நீங்கள் யாரிடமாவது விற்றால் உங்கள் செலவுக்குப் பணம் கிடைக்கும் என்றார்கள். சாது மீண்டும் மீண்டும் வேண்ட, சாமி மீண்டும் மீண்டும் மறுத்துவிட்டார்கள். அந்த சாது சென்ற மறுவிநாடி, மந்திரத்தில் மாங்காய் வரவழைப்பது போல், தான் அமர்ந்திருந்த பாய்க்கடியிலிருந்து 2 ருத்ராக்ஷமணிகளை எடுத்து என்னிடம் கொடுத்தார்கள். வாங்கி கண்களில் ஒற்றிக்கொண்டேன். அம்மா சிறந்த சிவபக்தை. ஊர் திரும்பியவுடன் அவர்களுக்கு ஒரு ருத்ராக்ஷத்தை கொடுக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருக்கும் போதே, இது திலகவதிக்காக மட்டுமே என்று சொல்லிவிட்டார்கள். அன்று முழுவதும் ருத்ராக்ஷம், துளசிமணி ஆகியவற்றின் பெருமைகளைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தார்கள். நமது பாரத தேசத்தில் காலம் காலமாக இவை பெரிதும் மதிக்கப்படுகின்றன. மிகவும் புனிதமானவை. மங்களகரமானவை என்று சொல்லிக்கொண்டே இருந்தார்கள். ராஜசேகர்ஜி அதைத் தங்கத்தில் கட்டி, சங்கிலியில் கோர்த்துக் கொடுத்தார்.

நெல்லிக்காயின் மகிமையைப் பற்றியே ஒரு நாள் முழுவதும் பேசிக்கொண்டிருந்தார்கள். ஆன்மாவுக்கு ராமநாமம். உடலுக்கு நெல்லிக்காய் என்று சொல்லிக்கொண்டே இருந்தார்கள். நெல்லித்தண்ணீரில் கண்களைக் கழுவினால் கண்புரை நோய் வராது. தலைமுடியில் தேய்த்து வந்தால் பொடுகு போய்விடும்.

நெல்லிக்காயை மிக்ஸியில் அடித்து சாறு எடுத்து குடித்துவந்தால் இதயநோய் வராது என்று அன்று முழுவதும் நெல்லிக்காய் புராணம். ராஜசேகர்ஜியை ஊர் திரும்பிய பின் 10 நாட்கள் தினந்தோறும் நெல்லிச்சாறு குடித்து, உடல்நிலை எப்படியிருக்கிறது என்று தனக்குக் கடிதம் எழுத வேண்டுமென்று சொன்னார்கள். இந்த பிச்சைக்காரனைப் போன்றவர்களும் நெல்லிக்காய் சாப்பிடலாம். ஆனால் தற்சமயம் பல் இல்லாமையால் நெல்லிக்காயை பச்சையாக சாப்பிட இயலவில்லை என்று கூறினார்கள். அன்றிரவு நாடார் லாட்ஜீக்கு திரும்பியபின் காய்கறி மார்க்கெட்டில் நிறைய நெல்லிக்காய் வாங்கிக்கொண்டோம். பஜாரில் கொப்பரைத்துருவி ஒன்றும் வாங்கிக்கொண்டோம். (அது இப்போது சந்நிதித்தெரு இல்லத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது.) மறுநாள் காலை சந்நிதித்தெரு சென்றவுடன், சாமியிடம் உத்தரவு வாங்கிக்கொண்டு, நெல்லிக்காயைத் துருவ ஆரம்பித்தேன். துருவி துருவி கொடுக்க கொடுக்க தன் கைகளால் அள்ளி வாயில் போடுவார். சிரிப்பார். வாயில் போடுவார். சிரிப்பார். அந்த சிரிப்பை வர்ணிக்க வார்த்தைகள் இல்லை. அவருடைய கண்கள், கூரிய மூக்கு, திருவாய், வெண்தாடி என்று எங்கும் சிரிப்பு மயம். அருள் மழையே என்மீது கொட்டுவது போல் இருந்தது. 12 வருடங்கள் கழித்து சுதாமாவில் தரிசித்த போது மாதேவகியிடம் திலகவதி ஒரு மெஷின் வாங்கி வந்தாள். இந்தப் பிச்சைக்காரனால் பச்சை நெல்லிக்காய் சாப்பிட முடிந்தது என்று கூறினார்கள்.

பக்தர் ஒருவர் சாமி மீது பாட்டு எழுதிக் கொண்டு வந்தார். சாமியும் அவரைப் பாடச் சொன்னார். ஒரு மகானைக் குறிப்பிட்டு அவர் கல்லை கனியாக்குவாராம். ஆனால் நீயோ கல்லான இதயத்தை கனியச்செய்வாய் என்பது போல் பாடினார். அவர் சென்ற பின், அவர் எழுதிய பாடலை என்னிடம் கொடுத்து வாசிக்கச்

சொன்னார். என் கண்களுக்கு அதிலிருந்த எழுத்துக்கள் சரியாகவே தெரியவில்லை. என்னால் வாசிக்க முடியவில்லை. ஒரு மகாத்மாவை குற்றம் சொன்னால் அது எல்லா மகாத்மாவையும் குற்றம் சாட்டுவது போல் ஆகும். அதனால்தான் இந்த பிச்சைக்காரன் அவர் பாடுவதை நிறுத்தினான். உன்னாலும் அதை வாசிக்க இயலவில்லை என்று சாமி சொன்னார்கள்.

சாமியே எங்கள் அனைவருக்கும் நோட் வாங்கித் தந்து, அதில் எங்கள் பெயரையும் அட்டையில் எழுதித் தந்து, ராமநாமம் எழுதும்படி சொன்னார்கள். 'ஓம் ஸ்ரீராம் ஜெயராம் ஜெய ஜெய ராம்' என்ற மந்திரத்தை எழுதினோம். நோட் எழுதி முடித்தவுடன் வேறொரு நோட் வாங்கி வந்து சாமி என் பெயரை எழுதிக்கொடுங்கள் என்றேன். ஓ திலகவதி இந்த பிச்சைக்காரன் அவள் பெயரை எழுத வேண்டுமென்று விரும்புகிறாள் என்று கூறிச் சிரித்தார்கள். பின்னர் சாமி நாமாவை எழுத ஆரம்பித்தோம். சாமியிடம் காட்டும்பொழுது ஒவ்வொரு பக்கமாகப் பார்த்து, ✓ குறியிடுவார்கள். ஓய்வுநேரத்தில் நாமநோட்டை எடுத்து வாசித்துப் பார்க்கலாம் என்பார்கள்.

இந்த பிச்சைக்காரன் எல்லோரையும் ராமா, கிருஷ்ணா என்று சொல்லச் சொல்கிறான். ஆனால் அவன் உள் இதயத்திற்குள்ளாக தன்னுடைய நாமாவே சொல்லப்பட வேண்டும் என்று விரும்புகிறான். ராமநாமாவை இடைவிடாமல் 21 நாட்கள் சொல்வதால் உண்டாகும் பலன், இந்த பிச்சைக்காரன் நாமாவை இடைவிடாமல் 7 நாட்கள் சொல்வதால் கிடைக்கும். ஏனென்றால் இது உடம்பில் இருக்கிறது என்பார்கள்.

சாமியின் அருளால் மனதில் எந்நேரமும் சாமியின் நாமம் ஒலித்துக் கொண்டிருந்தது. எங்கள் வீட்டில் மாடி அறையில் படுத்து உறங்குவது வழக்கம். அங்கிருந்து

ஜன்னல் வழியே பார்த்தால் மீனாட்சி அம்மன் கோவில் கோபுரம் அழகாகத் தெரியும். (இப்போது உயர்ந்த கட்டடங்கள் எழும்பி விட்டதால் தெரிவதில்லை) கோபுரத்தை வணங்கிவிட்டு படுக்கச் செல்வேன். ஒரு நாள் ஆழ்ந்த நித்திரையில் இருக்கும் பொழுது யாரோ என்னை உற்றுநோக்கிக் கொண்டு இருப்பதுபோல் ஒரு குறுகுறுப்பு. கண்களைத் திறந்துபார்த்தால் சாமி குனிந்தபடி என்னை உற்றுநோக்கியபடி இருக்கிறார். நான் தூக்கத்தில் இல்லை என்பதற்கு அடையாளமாக அறையின் ஜன்னலும் அதன் கம்பிகளும் நன்றாகத் தெரிகின்றன. ஆனால் சாமியின் உருவம் நிலவொளியில் செய்தது போல் இருக்கிறது. தன் தாடியைக் கையால் பிடித்துக்கொண்டு என்னை நோக்கி குனிந்தபடி இருக்கிறார். விழித்துக்கொண்டதும் சாமிநாமமா தானாக மனதில் ஒலித்துக்கொண்டிருப்பதை உணர்கிறேன். "ஏன் சாமி நான் எந்நேரமும் நாமாவைச் சொல்கிறேனா இல்லையா என்று பார்க்க வந்தீர்களா என்று கேட்கிறேன். மறுநிமிடம் தூங்கி விட்டேன். இரவும் பகலும் 24 மணிநேரமும் நம்மை ரக்ஷிக்கும் அவருடைய லீலையை யாரால் புரிந்துகொள்ளமுடியும்.

அடிக்கடி அண்ணாமலைசென்று சாமியைத் தரிசித்த நாங்கள், ஒருமுறை ஒன்றரை வருட இடைவெளிக்குப்பின் திருவண்ணாமலை சென்றோம். சந்நிதித்தெரு இல்லக்கதவைத் தட்டியவுடன், சாமியே கதவைத்திறந்து உள்ளே அழைத்துச் சென்றார்கள். Never for a moment this beggar felt he was away from Tilakavati(திலகவதியை விட்டு விலகியிருப்பதாக, ஒரு நொடிப்பொழுது கூட இந்த பிச்சைக்காரன் நினைக்கவில்லை) என்று சொல்லிக்கொண்டேயிருந்தார்கள். எல்லாம் வல்ல பரம்பொருள் என்னை எப்பொழுதும் நினைவில் வைத்திருப்பதாகச் சொன்ன கருணைக்கு நான் என்ன கைம்மாறு செய்ய முடியும்.

1988லிருந்து சாமி சந்நிதித்தெரு இல்லத்தின் வராந்தாவிலிருந்து தரிசனம் கொடுக்க ஆரம்பித்தார்கள்.

நாங்கள் சிவகாசி நாடார் லாட்ஜில் தங்குவோம். சாமியும் அங்கு வந்துவிடுவார்கள். எந்த ஒரு விஷயத்தையும் போதனை செய்வது மாதிரி சொல்லாமல் மனதில் ஆழமாகப் பதியச் செய்து விடுவார்கள். பெற்ற தாயானவள் தன் வயிறு குளிர்ந்து செய்யும் ஆசிர்வாதம், இந்த பிச்சைக்காரன் போன்றோர் செய்யும் ஆசிர்வாதத்தை விட 1000 மடங்கு அதிகம் என்பார்கள். ஆசிரமத்துக்குச் சென்ற பின்பும், நாங்கள் ஊர்திரும்பும் நாளன்று, சுதாமாவுக்குத் திரும்பும் போது, கேட்டருகே காரை நிறுத்தி, ரவிசாரிடம் ராஜசேகர்ஜியையும், என்னையும் அழைத்து வரச் சொல்வார்கள். எங்களைப் பார்த்து மகன்கள் இருவரும் நீங்கள் சொன்ன பேச்சைக் கேட்கிறார்களா என்பார்கள். அதே போல் மருமகள்களும் கேட்கிறார்களா என்று கேட்டுச் சிரிப்பார். ஊர் போய்ச் சேர்ந்தவுடன் 2 வரி இந்த பிச்சைக்காரனுக்கு எழுதுங்கள் என்பார். நாடார் லாட்ஜில் நாங்கள் தங்கியிருந்த போது, ஒருமுறை அதிகாலை 5¾ மணிக்கெல்லாம், ராஜசேகர்ஜி இந்த பிச்சைக்காரன் வந்துவிட்டான் என்று கூறியபடி வந்தார்கள். நாங்கள் அனைவரும் (மகன்கள், மருமகள்கள்) சாமியின் முன் வரிசையாக அமர்ந்தோம். இன்று Dr. ராதாகிருஷ்ணன் இந்த பிச்சைக்காரனைப் பார்க்க வருகிறார். அதற்கு முன் இந்த பிச்சைக்காரன் உங்களை நன்கு பார்க்க விரும்பினான் என்றார்கள். பின் மௌனமாக சிறிது நேரம் இருந்த பின், லம்போதரன், புஷ்பவேணி, குமாரவேல், ஐஸ்வர்யாவைப் பார்த்து, 'Tilakavati has conquered sundareswara by her love and devotion. Serve her in all possible ways and earn her blessings. (திலகவதி தன் அன்பினாலும், பக்தியினாலும் சுந்தரேசப்பெருமானை வெற்றி கொண்டு விட்டாள். எல்லா வகையிலும் அவளுக்கு சேவைபுரிந்து அவளுடைய ஆசிர்வாதத்தை பெற்றுக் கொள்ளுங்கள்) என்றார். தாய் தந்தையரிடம் குழந்தைகள் அன்புடனும், மரியாதையுடனும் இருக்க வேண்டும் என்பதை எவ்வளவு அழகாக அவர்கள் மனதில் பதியச் செய்து விட்டார்.

அன்று காணிமடம் கும்பாபிஷேகம் பற்றி பேச்சு வந்தது. அதற்கு முன்னர் ஒருமுறை நாங்கள் நாடார் வீட்டில் தங்கியிருந்த போது, திரு.பொன். காமராஜ் அவர்களும், சாமி சிலை வடிக்கும் சிற்பியும் வேறொரு அறையில் தங்கியிருந்தார்கள். சாமி எங்களிடம் "சிலை வைக்கவேண்டுமென்று தாங்களாகவே முடிவெடுத்துக் கொள்கிறார்கள். பின்னர் இந்த பிச்சைக்காரன் அனுமதி தந்து விட்டான் என்று சொல்லிக்கொள்கிறார்கள்," என்று சிலை வைப்பது தனக்குப் பிடிக்காதது போல் முணுமுணுத்துக் கொண்டிருந்தார்கள். கும்பாபிஷேகத்திற்கு திரு.பொன். காமராஜ் அவர்கள் வீடுதேடி வந்து அழைப்பிதழ் கொடுத்தார். ஆனால் இது சாமிக்கு பிடிக்காத காரியம் என்று நாங்களாக நினைத்துக் கொண்டு, நாங்கள் கும்பாபிஷேகத்திற்குச் செல்லவில்லை. சாமி என்னைப் பார்த்து காணிமடம் கும்பாபிஷேகத்திற்குச் சென்றாயா என்று கேட்டார்கள். இல்லை என்று சொல்லவும், ஏன் பொன். காமராஜ் உனக்கு அழைப்பிதழ் தரவில்லையா என்று கேட்டார்கள். வீட்டிற்கே வந்து அழைப்பிதழ் தந்தார் என்றேன். ஏன் ராஜசேகர்ஜி காணிமடம் செல்ல உன்னை அனுமதிக்க வில்லையா என்று கேட்டார்கள். அப்படி ஒன்றும் இல்லை சாமி என்றேன். மண்டலாபிஷேகம் வருகிறது. இந்த பிச்சைக்காரன் உனக்கு அழைப்பிதழ் தருகிறேன். ராஜசேகர்ஜி அனுமதித்தால் மண்டலாபிஷேகத்திற்குக் காணிமடம் செல்வாயா. இந்த பிச்சைக்காரன் திலகவதி மண்டலாபிஷேகத்திற்குச் செல்ல வேண்டும் என்று விரும்புகிறான் என்றார்கள், அவசியம் செல்வேன் சாமி என்றேன். ராஜசேகர்ஜியும் திலகவதியை வசதியாகக் காணிமடத்திற்கு அனுப்பிவைப்பேன் என்றார். நன்றி ராஜசேகர்ஜி நன்றி என்று கூறி அவரை ஆசிர்வதித்தார்கள். மதுரை திரும்பியவுடன் எனக்கு கர்ப்பப்பை கோளாறு காரணமாக கடும்வலியும் உதிரப்போக்கும் ஏற்பட்டது. ஸ்கேன் செய்து பார்த்துவிட்டு உடனடியாக கர்ப்பப்பையை அகற்ற

வேண்டும் என்று சொல்லி விட்டார்கள். இன்னும் 3 நாட்களில் மண்டலாபிஷேகம். டாக்டரிடம் அவசியம் கோவில்காரியமாகச் செல்ல வேண்டும் என்று கூற, இரத்தப்போக்கு நிற்க மாத்திரை தருகிறேன். அந்த மாத்திரை சாப்பிட்டால் தலைச்சுற்றல் அதிகமாக இருக்கும். கோயில் சென்று திரும்பியவுடன் நேரடியாக மருத்துவமனையில் சேர வேண்டும் என்று எச்சரித்தார்கள். என் மகன் குமாரவேலு கார் ஓட்டி வர, பின் சீட்டில் படுத்துக் கொண்டு காணிமடம் சென்றேன். மாத்திரையின் வீரியத்தால் பேசினால் வாய்குழறியது. எழுந்து நின்றால் கால்கள் பின்னின. காணிமடம் சென்றோம். தேவலோகத்துக்குள் நுழைந்தது போல் இருந்தது. ஸ்வாமியின் திருவிக்ரகத்தை தரிசித்து, எல்லோருடனும் சேர்ந்து சாமியின் திருவிக்ரகத்தைச் சுற்றி சுற்றி வந்து நாமகீர்த்தனம் செய்தபடியே கும்மியடித்துக் களித்தேன். வாய் குளறவில்லை. கால்கள் பின்னவில்லை. திருவண்ணாமலையிலிருந்து மாதேவகி போன் பண்ணி யாரெல்லாம் வந்திருக்கிறார்கள் என்று பகவான் கேட்கச் சொன்னார் என்று கேட்டார்கள். திரு. சந்திரசேகரன் வந்தவர்கள் பெயரோடு என் பெயரையும் சேர்த்துக் கூறினார்கள். சாமிக்கு நான் காணிமடம் வந்துள்ள செய்தி போய்விடும். அவர் சொல்படி நான் நடந்தேன் என்பது தெரிந்துவிடும் என்று சந்தோஷமாக இருந்தது. மந்திராலயத்தில் பிரசாதம் எடுத்துக்கொண்டு, எல்லோரிடமும் விடை பெற்றுக்கொண்டு மதுரை வந்து சேர்ந்தோம். முதல்வேலையாக சாமிக்கு மந்திராலயம் சென்று வந்த விபரத்தை கடிதம் எழுதி தபாலில் சேர்த்துவிட்டு, உடனடியாக மருத்துவமனையில் சேர்ந்தேன். மறுநாள் அதிகாலை நம் வைத்தீஸ்வரன் கருணையினால் நல்லபடியாக அறுவைசிகிச்சை முடிந்தது.



## அக்ரஹாரக் கொல்லையில் ஆஸ்ரமம் கண்டருளிய லீலை

ஆஸ்ரமத்துப் பத்திரப் பதிவு நாளுக்கு திரு. ஜனார்த்தனன் போன் பண்ணி அழைத்திருந்தார். நாங்கள் சகோதரியர் மூவரும் பஸ்ஸில் திருவண்ணாமலை சென்றோம். சாமி ஆஸ்ரமநிலத்தில் திரு. ஜனார்தனன் காரில் உட்கார்ந்திருந்தார்கள். அருகில் ரமணாஸ்ரம் திரு.கணேசன் விசிறிக் கொண்டுஇருந்தார். தூரத்தில் வரும்போதே சாமி எங்களைப் பார்த்து விட்டார்கள். சாரதா, உமா, திலகவதி என்று கையை அசைத்துக் கொண்டு கூப்பிட்டார்கள். தாயைக்கண்ட சேயைப்போல் ஓடினோம். எங்களைப் பார்த்ததும் சாமிக்கு அவ்வளவு ஆனந்தம். ஓ ஜனார்தனன் நண்பர்களையெல்லாம் அழைத்திருக்கிறாரே என்று சந்தோஷப்பட்டுக் கொண்டார்கள். ராஜேஸ்வரி அக்கா, சசிக்கா வந்திருந்தார்கள். மழை வந்து விட்டது. அங்கு போடப்பட்டிருந்த ஷாமியானாவுக்குள் அனைவரும் ஒதுங்கினோம். சாமியின் காரும் நிறுத்தப்பட்டது. திடீரென்று ஷாமியானா சாய்ந்துவிட்டது. ஆனால் யாருக்கும் அடிபடவில்லை. சாமி காரில் உட்கார்ந்திருக்க வந்திருந்த பெண்கள் அனைவரும், நாமாவைப் பாடி காரைச் சுற்றி கும்மியடித்தோம். பழையபடி தூறல் வந்துவிட்டது. அனைவரும் சாமியுடன் சுதாமா இல்லத்திற்குச் சென்றோம். நாங்கள் சுமார் 25 பேர் இருந்தோம். அத்தனை பேருக்கும் மாதேவகி மிக்சர், பிஸ்கட், பால் வழங்கினார்கள். அக்காலக்கட்டத்தில் மாதேவகி மட்டும் தனியாக சுதாமாவில் இருந்தார்கள். திடீரென வந்த 25 பேருக்கும் எப்படி 1 டம்ளர் பால், பிஸ்கட், மிக்சர் கொடுக்க முடிந்தது? அக்ஷயபாத்திரம் வைத்திருப்பார்களோ என்று ஆச்சரியப்பட்டேன். சாமியின் அருள் துணை இருக்கும்போது என்னதான் நடக்காது?. சாமி என்னை லீலை சொல்லச் சொன்னார்கள். கௌரிலீலை சொன்னேன். திரு. ஜனார்தனன் தனக்கே உரிய பாணியில் சுந்தரகாண்டம் சொல்லி எல்லோரையும்

வயிறு குலுங்க சிரிக்க வைத்துவிட்டார். சாமி சந்நிதித்தெரு இல்லம் திரும்பினார்கள். நாங்களும் நாடார் லாட்ஜ் திரும்பினோம்.

மறுநாள் காலையிலேயே ஆஸ்ரமநிலத்திற்குச் சென்றுவிட்டோம். சாமி நாதசுர இசையுடன் வரவேற்கப்பட்டார்கள். நகரத்தார்கள், சாதுக்களுக்கு வஸ்திர தானத்திற்கும், அனைவருக்கும் அன்ன-தானத்திற்கும் மிகவும் சிறப்பாக ஏற்பாடு செய்திருந்தார்கள். அவர்கள் எல்லோரையும் வரவேற்றபாங்கும், உபசரித்த பண்பும் போற்றுதற்குரியது. பத்திரப்பதிவு நாளான அன்றும் சாமி நடு நாயகமாக அமர்ந்திருக்க, நாங்களெல்லாம் அவரைச் சுற்றி கும்மியடித்தோம். மதியம் சாமி எங்கள் மூவரையும் அழைத்து அருகில் அமர்த்திக்கொண்டார்கள். லலிதா நவரத்னமாலை இரண்டுமுறை பாடச் சொன்னார்கள். என்னை வளையல்விற்றலீலை சொல்லச்சொன்னார்கள். திரு. ஜனார்தனன் சுந்தரகாண்டம் சொன்னார். திரு. பார்த்தசாரதி சுருக்கமாகவும், உருக்கமாகவும் அற்புதமாக உரையாற்றினார். மாதேவகி நாமமகிமையைப் பற்றிப் பேசினார்கள். சாமி சுதாமா சென்று விட்டார்கள். மாலையில் மறுபடியும் வந்தார்கள். ரமணாஸ்ரம் திரு. கணேசனிடம் இந்த பிச்சைக்காரனுக்கு மிகவும் களைப்பாக இருக்கிறது. ஆனால் அந்த மூன்று சகோதரிகளையும் நன்றாக பார்க்க வேண்டும் என்று நாலைந்துமுறை சொன்னார்களாம். ஆஸ்ரமநில பத்திரப்பதிவு முடிந்தவுடன் மறுநாள் சுகமாக ஊர் திரும்பினோம்.

ஜனவரியில் தர்ஷன் மந்திர் திறப்பு விழா நடந்தது. எனது மருமகள் புஷ்பவேணிக்கு திடீரென்று பிரசவம் ஆனபடியால் என்னால் செல்ல இயலவில்லை. உமா, சாரதா, குமாரவேலு மூவரையும் பார்த்தவுடன் சாமி திலகவதி எங்கே என்று கேட்டார்களாம். காலை நேரத்தில் சூரியஒளி தர்ஷன் மந்திரில் நுழைந்தபோது,

குமாரவேலுவைக் கூப்பிட்டு, தன்னையும், மாதேவகியையும் சூரியஒளியுடன் புகைப்படம் எடுக்கச் சொன்னார்கள்.

பிப்ரவரியில் பூஜ்ய ஸ்ரீசச்சிதானந்தசுவாமிகள் ப்ரதான் மந்திருக்கு அடிக்கல் நாட்ட வந்தார். பேரன் மீனாட்சி சுந்தரத்திற்கு என் உதவி தேவைப்படவில்லையென்றால், அந்த விழாவிற்கு நான் வரவேண்டுமென்று, மாதேவகியின் மூலம் கடிதம் எழுதி அனுப்பினார்கள். நாங்கள் அனைவரும் அடிக்கல் நாட்டு விழாவிற்குச் சென்றிருந்தோம். தரிசனத்தின் போது மீனாட்சிசுந்தரத்தின் உடல்நிலை குறித்து அக்கறையுடன் கேட்டுத் தெரிந்துகொண்டார்கள்.

மே மாதம் அறங்காவலர் கூட்டம் நடந்தது. மதுரை மண்டல அறங்காவலராக சாமி உங்கள் பெயரைச் சேர்த்திருக்கிறார். கூட்டத்திற்கு வர வேண்டும் என்ற அழைப்பிதழ் வந்தது. நாங்கள் மூன்று சகோதரிகளும் சென்றோம். அப்போது சுதாமாவிலும், தர்ஷன்மந்திரிலும் சாமியை தரிசனம் செய்தோம். மே மாதம் 5ம் தேதியிலிருந்து எங்கள் வீட்டில் மகளிர்சத்சங்கம் ஆரம்பித்திருப்பதைச் சொன்னேன். மிகவும் சந்தோஷப்பட்டார்கள். ராஜகுமாரிக்கா எழுதிய "ஜயகுரு ஓம் ராம்சுரத்குமாரா " என்ற பாடலைப் பாடினோம். Repeat என்று சொல்லி இன்னொரு முறை பாடச் சொன்னார்கள். அப்பாடலில்

காஞ்சி காமாட்சியுடன் ஓடிவாடா
மதுரை மீனாட்சியுடன் ஆடிவாடா
காசி விசாலாட்சியுடன் ஆடிவாடா

என்ற வரிகள் வரும். நாங்கள் பாடி முடித்தவுடன் எங்களைப் பார்த்து, "இந்த தேவகி ஒருத்தியைக் கும்பிட்டால், காஞ்சி காமாட்சி, மதுரை மீனாட்சி, காசி விசாலாட்சி ஆகிய மூவரையும் கும்பிட்ட பலன் கிடைக்கும்" என்றார்கள். பின் மாதேவகியைப் பார்த்து,

“தேவகி! நீ ராஜகுமாரி, சசிரேகா, திலகவதி ஆகிய மூவரையும் நம்பலாம்” என்றார்கள். நாங்கள் மூவரும் மாதேவகியின் திருவடிகளில் விழுந்து வணங்கினோம். சாமிக்கு சமர்ப்பிக்கப்பட்ட மாலைகளை நாங்கள் மூவர், ராஜகுமாரி அக்கா, சசிக்கா, அபுரூபம் அம்மா, ஜெயலட்சுமி அம்மா ஆகிய ஏழுபேருக்கும் மாதேவகியை அணிவிக்கச்செய்து, மாலையுடன் சுதாமாவிலிருந்து ஆஸ்ரமத்துக்குச் செல்ல வேண்டும் என்று சொன்னார்கள். அன்றுதான் ஆஸ்ரமத்தில் முதன்முதலாக அன்னதானம். தர்ஷன்மந்திரில் சாமியின் படத்திற்கு என்னை ஆரத்திகாண்பிக்கச்சொன்னார்கள். தர்ஷன் மந்திரிலேயே நாங்கள் அனைவரும் சாமியின் அருட்பிரசாதமான மதிய உணவைச் சாப்பிட்டோம்.

ஆவணி மாதம் 1ம் தேதி, துணிமணிகள் வாங்குவதற்காக ஹாஜிமூஸா ஜவுளிக்கடை வந்தேன். வந்தவேலை சீக்கிரமே முடிந்து விட்டதால், எதிரில் மீனாக்ஷியம்மன் கோயிலுக்குச் சென்று தரிசனம் செய்துவிட்டு வந்துவிடலாம் என்று சென்றேன். சாமி சந்நிதி வழியாக உள்ளே நுழைந்தபோது, கம்பத்தடி மண்டபத்தருகே பக்தர்கள் கூட்டமாக அமர்ந்திருந்தார்கள். என்ன விசேஷம் என்று கேட்ட போது, இன்று வளையல்விற்ற லீலை நடக்கப்போகிறது என்றார்கள். மனம் துள்ளியது. எவ்வளவு நேரமானாலும் பரவாயில்லை. லீலையைப் பார்த்து விட்டுதான் செல்ல வேண்டும் என்று முடிவெடுத்தேன். வீட்டில் ராஜசேகர்ஜிக்கு சமையல் செய்து, மேஜையில் வைத்துவிட்டு வந்திருந்தேன். அவர் நேரமாகிவிட்டது என்று கோபித்தாலும் பரவாயில்லை, லீலையைச் பார்க்க வேண்டும் என்று கோவிலில் இருந்துவிட்டேன். வளைச்செட்டியாக வேடமிட்டவரை, யானைமீது உட்காரவைத்து ஊர்வலமாக அழைத்துவந்தார்கள். பின் அவருக்கு கோயில்மரியாதை செய்தார்கள். அவர் தன் தலையில் ஒரு கூடையில்

வளையல்களைச் சுமந்து கொண்டார். இரண்டுதோள்களில் கயிற்றில் கோர்த்த வளையல்களைப் போட்டுக் கொண்டு ஒவ்வொரு சந்நிதியாகச் சென்று தெய்வங்களுக்கு வளையல் அளித்தார். கூட்டம் பூராவும் அவர்பின் வளையலைக் கேட்டுக்கொண்டே ஓடியது. நானும் கையேந்திக்கொண்டு ஓடினேன். வளைச்செட்டியாக வந்த சுந்தரேசப்பெருமான் பின் ஓடிய வணிகப்பெண்கள் போல் உணர்ந்தேன். அவரும், அவருடன் வந்தவர்களும் வளையல்களை பக்தர்களுக்கு அளித்துக்கொண்டே சென்றார்கள். ஆனால் எனக்கு கிட்டவில்லை. கோயில்பூராவும் சுற்றி கல்யாண மண்டபம் வந்து சேர்ந்தார். கூட்டம் பூராவும் அவரை வளையல்கேட்டு நச்சரித்துக் கொண்டிருந்தது. நானும் கையை நீட்டினேன். சற்றும் எதிர்பாராதவிதமாக கடைசி நான்கு வளையல்களை நீட்டிய என் கைகளில் வைத்தார். எனக்கு சுந்தரேசப்பெருமானே ஆசிர்வாதம் செய்தது போல் இருந்தது. இதை அப்படியே சாமிக்கு எழுதினேன். சில தினங்கள் சென்ற பின் அண்ணாமலை சென்றோம். தர்ஷன் மந்திரில் சாமி இருந்தார்கள். ஒரு பக்கம் ஜஸ்டிஸ் ஐயாவும், மறுபக்கம் Dr. ராமநாதனும் அமர்ந்திருந்தார்கள். சாமி என்னை அழைத்து அன்று நடந்ததை ஒன்று விடாமல் சொல்லச் சொன்னார்கள். "ராஜசேகர்ஜி கோபித்தாலும் பரவாயில்லை. லீலையைப் பார்த்து விட்டுத்தான் செல்ல வேண்டும்" என்று சொன்ன போது, விழுந்து விழுந்து சிரித்தார்கள். அவர்கள் முகமே சிவந்துவிட்டது. பிறகு பிட்டுக்கு மண்சுமந்த லீலையைச் சொல்லச் சொன்னார்கள். அதைக் கேட்டும் ஒரே சிரிப்பு தான். சுதாமா புறப்படும் சமயம் என் முன்னர் குத்துகாலிட்டு உட்கார்ந்து கொண்டார்கள். திலகவதி பாட்டியாகி விட்டாள். எத்தனை பேரக் குழந்தைகள் என்று கேட்டார்கள். இரண்டு என்று சொன்னேன்.

சாரதா ஒரு சமயம் திருவண்ணாமலை சென்றபோது, 10 குடில்களைப் பற்றி பேச்சு வந்தது. சாமியே யார் யார்

பெயரில் குடில்கள் இருப்பது பற்றிச் சொன்னார்களாம். மணிசார் சாரதாவிடம் திலகவதி ஒருகுடிலுக்கு பொறுப்பேற்றுக் கொள்வாரா என்று கேட்டார். சாரதா அக்காவால் தனியாக முடியாது. நாங்கள் மூவரும் பங்கேற்றுக்கொள்ளலாமா என்று கேட்டாள். சாமியிடம் மணிசார் கேட்டபோது சாமியும் ஒப்புதல் அளித்துவிட்டார்கள். இவ்விஷயம் சாரதா திருவண்ணாமலையிலிருந்து போன் பண்ணி சொன்னபோது வானத்தில் பறப்பது போல் இருந்தது.

மணிசார் குடில் சரணாகதம் திறப்புவிழாவிற்கு வருமாறு மணிசார் போன் பண்ணினார். ஜனவரி 20 திறப்புவிழா. ஜனவரி 19ல் சிவகாசியில் உமா மருமகள் ராஜேஸ்வரிக்கு வளைகாப்பு. வளையல்கள் நிறைய எடுத்துக்கொண்டு, ராஜசேகர்ஜி, நடேஷ்ஜி, உமா, சாரதா, லக்ஷ்மிபாய், நான் திருவண்ணாமலைக்கு புறப்பட்டோம். நாடார் லாட்ஜில் இரவு தங்கி, அதிகாலை 5½ மணிக்கெல்லாம் ஆஸ்ரமம் சென்றுவிட்டோம். சாமி சுதாமாசகோதரிகளுடன் 6 மணிக்கு வந்தார்கள். புதுக்குடிலில் பால்காய்ச்சும் விழா இனிதாக நடைபெற்றது. மணிசார் ஆஸ்ரமத்துப் பணியாளர்கள் அனைவருக்கும் புத்தாடைகள் சாமியின் திருக்கரங்கள் மூலம் வழங்கினார். காலை உணவுக்குப்பின் சாமியிடம் வளையல்கள் கொண்டுவந்திருப்பதைச் சொன்னேன். என்னைத் தன்னருகில் அமரச் செய்து, நான் வளையல் எடுத்துத் தர தானே எல்லா பெண்களுக்கும் வழங்கினார். எல்லோருக்கும் கொடுத்து முடித்தபின் நான் கைகளை நீட்ட, தானே எனக்கு வளையல் அணிவித்தார்கள், இப்போது நினைத்தாலும் நெஞ்சமெல்லாம் நிறைகிறது.

அடுத்து பிப்ரவரி 11,12 தேதிகளில் தரிசனத்திற்குச் சென்றோம். ஸ்வாகதம் மந்திரில் தரிசனம். அன்று தான் முதன் முதலில் ஸ்வாகதம் மந்திருக்குள் சென்றோம். ஏதோ சொர்க்கலோகத்தில் புகுந்தது போல் இருந்தது. பிப்ரவரி

11 பேத்தி பவதாரிணியின் முதல்பிறந்த நாள். சாமியிடம் இதைச் சொல்லி மிட்டாய்கள் சமர்ப்பித்தேன். சாமி வந்திருந்த அனைவருக்கும் வழங்கச் சொன்னார்கள். கௌரிலீலை சொல்லச் சொன்னார்கள். மறுநாள் 12ம் தேதி ஜஸ்டிஸ் ஐயா வந்திருந்தார்கள். வெளியிடப் போகும் புத்தகத்தில் நானும் ஒரு கட்டுரை எழுத வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். தரிசன நேரம் முடிந்து சாமி சுதாமா புறப்பட்டுவிட்டார்கள். நாங்களும் வெளியேறும் சமயம், மணிசார் சாமி அணிந்திருந்த பெரியமாலையை எடுத்துக்கொண்டு வந்தார். இந்த பிச்சைக்காரன் கொடுத்ததாக திலகவதிக்கு இந்த மாலையைக் கொடுத்து விடுங்கள் என்று சாமி சொன்னதாகக் கூறினார். ஆனந்தத்தில் கண்ணீரே வந்துவிட்டது.

ஏப்ரல் மாதம் எங்கள் சத்சங்க பெண்கள் அனைவரும் திரு. ஆனந்தராஜ் அவர்களுடைய பஸ்ஸில் திருவண்ணாமலை சென்றோம். டைனிங் ஹாலில் தரிசனம். சாமி தன்னருகில் நின்று அநேக லீலைகளைச் சொல்லுமாறு கூறினார்கள். ஒரு பெண்மணி நிறைய மஞ்சள் கிழங்கு கொண்டுவந்திருந்தார். புஷ்பங்கள் கொண்டு சென்றிருந்தோம். சாமி, மாதேவகி மூலம் வரிசையில் அமர்ந்திருந்த அனைவருக்கும் பூவும் மஞ்சளும் கொடுத்தார்கள். மதுரை மகளிர் அனைவரும் சாமி தரிசனத்தால் மனநிறைவுடன் திரும்பினார்கள். அதற்குப்பின் அடிக்கடி அனைவரும் வேனிலோ, பஸ்ஸிலோ சாமி தரிசனத்திற்கு வந்துவிடுவோம்.

மேமாதம் புத்தக வெளியீடு கோலாகலமாக நடைபெற்றது. 3 வது குடில் திறப்புவிழா ஜூலை 3ம் தேதி என்று நாள் குறிப்பிட்டார்கள். நாங்கள் மூன்று சகோதரிகளும் குடும்ப உறுப்பினர்கள் அனைவருடனும் ஜூலை 2ம் தேதியே வந்து நாடார்லாட்ஜில் தங்கினோம். ஜூலை 2ம் தேதி மாலை 6 மணிக்குப்பின் சாமி எங்களை

சுதாமாவிற்கு வரச்சொன்னார்கள். ராஜசேகர்ஜி, திரு.சுரேந்திரன், நடேஷ்ஜியுடன் நாங்கள் மூவரும் சென்றோம். குடிலுக்கு என்ன பெயர் வைக்கலாம் என்று என்னைக் கேட்டார்கள். சுந்தரேஸ்வராவைத் தவிர எனக்கு வேறு ஒன்றும் தெரியாது என்றேன். வைகை நதிக்கு வேறு என்னென்ன பெயர்கள் இருக்கின்றன என்று கேட்டார்கள். சிவஞானதீர்த்தம், சிவகங்கா, வேகவதி, கிருதமால் என்றேன். குடிலுக்கு சிவகங்கா என்று பெயர் சூட்டுவோம் என்றார்கள். எங்கள் ஆறு பேருக்கும் சால்வை கொடுத்து ஆசிர்வதித்தார்கள். மறுநாள் அதிகாலையிலேயே ஆஸ்ரமம் சென்று, சிவகங்கா முன் கோலமிட்டு, சாமியை வரவேற்கத் தயாரானோம். சரியாக ஆறுமணிக்கு சாமி சுதாமாவிலிருந்து அன்னையருடன் வந்தார்கள். சாமிக்கு பூர்ணகும்பமரியாதை செய்து, மாலை அணிவித்து வரவேற்றோம். பால்காய்ச்சியபின் மாதேவகி குத்துவிளக்கு ஏற்றி சாமிக்கு ஆரத்திகாட்டினார்கள். எல்லோரும் பால் அருந்தியவுடன் காலை உணவுக்கு டைனிங்ஹால் சென்றோம். அன்று முழுவதும் சாமி ராஜசேகர்ஜியை தன் அருகிலேயே அமர்த்திக்கொண்டார். அவர் மோதிரத்தை வாங்கி தன்விரலில் அணிந்துகொண்டார். ராஜசேகர்ஜியையும், என்னையும் "திருவிளையாடல் போற்றிக் கலிவெண்பா" பாடச் சொன்னார்கள். எங்கள் அனைவரையும் தெய்வத்தாய் மதாலஸா பற்றிய கட்டுரையை வாசிக்கச் சொன்னார்கள். அன்றிரவு சிவகங்காவில் தங்கினோம். முதன்முதலாக ஆஸ்ரமவளாகத்தில் தங்குகிறோம் என்ற உணர்வு பெருமிதம் கொள்ளச் செய்தது. ஜூலை 4ம் தேதி எங்கள் திருமணநாள். உமாவும், சாரதாவும் எங்களுக்குத் தெரியாமல் எங்களிருவருக்கும் புதுத்துணி எடுத்து வந்திருந்தார்கள். டைனிங் ஹாலில் சாமி வந்தமர்ந்தவுடன் சாமியிடம் புத்தாடைகளைக் கொடுத்து எங்களுக்கு வழங்குமாறு கேட்டுக் கொண்டார்கள். சாமி எங்களிருவரையும் அழைத்து புதுத்துணிகளைக் கொடுத்து,

இதை இப்பொழுதே நீங்கள் அணிந்து வரவேண்டும் என்றார்கள். சிவகங்கா சென்று இருவரும் உடைமாற்றி வந்தோம். ராஜசேகர்ஜிக்கு வேஷ்டியும் துண்டும் வாங்கியிருந்தார்கள். வேஷ்டிகட்டி, தோளில் துண்டு போட்டுக் கொண்டு வந்த ராஜசேகர்ஜியின் புதுக்கோலத்தைப் பார்த்து சாமிக்கு ஒரே சிரிப்பு. எங்கள் குடும்பத்தினரும் சிரிக்க ஆரம்பித்துவிட்டார்கள். அப்பொழுது சின்னக்கவுண்டர் திரைப்படம் வந்த சமயம். அதில் கதாநாயகன் தோளில் துண்டு போட்டு வருவார். அன்றிலிருந்து என் தங்கை மகள் மீனாட்சி இவரை 'கவுண்டரே' என்று கூப்பிட ஆரம்பித்து விட்டாள். நாங்கள் ஊர்திரும்ப தயாரானோம். மணிசார் திரு. ஆஷிஷ் பக்ரோடியா வருவதாகவும், அவருக்கு சிவகங்காவில் தங்குவதற்கு ஏற்பாடு செய்யலாமா என்று கேட்டார். அதற்கு திலகவதியைத்தான் கேட்க வேண்டும் என்று சாமி சொல்லிவிட்டார்கள். சாமி அனைத்தும் உங்களுடையது தானே என்று நான் பலமுறை கூறியும் நீ சரிஎன்றால் தான் அவருக்கு இடம் தரப்படும் என்று கூறிவிட்டார்கள். நான் 'சரி' என்று சொன்ன பின்னர் தான் சாமி என்னை விட்டார்கள். பின் சாமியை வணங்கி பிரசாதம் பெற்று சுகமாக ஊர்திரும்பினோம்.

1998 ஜனவரி மாதம், நானும் ராஜசேகர்ஜியும் ஆஸ்ரமம் வந்தோம். பிரதான் மந்திரின் நுழைவுவாயிலில் எங்களுக்குத் தரிசனம் தந்தருளிய சாமி, ஜஸ்டிஸ் ஐயாவுக்கு எங்களை அறிமுகப்படுத்தினார்கள். நாங்கள் முதன்முதலாக சாமியைப் பார்த்த ஆண்டு, தேதியைக் கேட்ட பின், சாமி ஜஸ்டிஸ்ஐயா அவர்களிடம், இவர்கள் இத்தனை ஆண்டுகளாக இந்த பிச்சைக்காரனிடம் வருகிறார்கள். இவர்கள் இருவரையும் நீங்கள் நம்பலாம் என்றார்கள். ஐயாவையும் எங்களையும் நன்கு பழகிக் கொள்ளச் சொன்னார்கள். சாமி சுதாமா சென்றபின், ஐயா அவர்களே நாங்கள் தங்கியிருந்த சிவகங்கா குடிலுக்கு வந்தார்கள்.

சாமி சொன்னதின்பேரில், டில்லியில் வழக்கறிஞர் தொழிலை விட்டுவிட்டு வந்ததைச் சொன்னார்கள். கோடி கோடியாகக் கொட்டிக்கொடுக்க கட்சிக் காரர்கள் காத்திருந்தும், பகவான் சேவையே பரமானந்த சேவை என்று வந்திருந்த அவரது வைராக்யமும், சாமி அவர் மேல் வைத்திருந்த நம்பிக்கையும், எங்களுக்கு அவர் மேல் மிகுந்த மரியாதையை ஏற்படுத்தியது.

பப்பா ராம்தாஸ் பற்றிய பேச்சுவந்தாலே சாமியின் குரல் தழுதழுத்து விடும். இந்த பிச்சைக்காரன் மீது உண்மையான அன்பு வைத்திருப்பவர்கள் ஒரு முறையேனும் ஆனந்தாஸ்ரமம் செல்ல வேண்டும். அங்கு என் தந்தை பப்பா ராம்தாஸ் ராமநாமம் என்ற உறுதியான அஸ்திவாரத்தை எழுப்பியிருக்கிறார்கள் என்பார். 1989 ஜனவரி மாதம் மாதாஜி ஸித்தி அடைவதற்குச் சில தினங்களுக்கு முன்னால், மதுரை ஆனந்தாஸ்ரம பக்தர்களுடன் ஆனந்தாஸ்ரமம் சென்று 1 வாரம் தங்கக்கூடிய பாக்கியம் கிடைத்தது. எங்கள் சத்சங்கமகளிர் 20 பேர் 1999ல் ஆனந்தாஸ்ரமத்தில் 5 நாட்கள் தங்கினோம். சாமி மிகவும் சந்தோஷப்பட்டார்கள்.

1999ல் எங்கள் மதுரை மகளிர் சத்சங்கத்திலிருந்து சாமி தரிசனத்திற்கு, 42 பேர் திரு. ஆனந்தராஜ் பஸ்ஸில் திருவண்ணாமலை வந்திருந்தோம். ஆனந்தமாக சாமியைத் தரிசித்தபின், ஊர் திருமபும் முன் விடைபெறுவதற்காக ஐயாவிடம் வந்தோம். அந்நேரம் காலை 10 மணி. 42 பேர் இருக்கிறீர்களே, மதிய உணவு எங்கு சாப்பிடுவீர்கள் என்று ஐயா கேட்டார்கள். வழியில் எங்காவது ஹோட்டலில் நிறுத்தி சாப்பிடுவோம் என்றோம். 42 பேருக்கும் ஒரே நேரத்தில், ஒரே ஹோட்டலில் எவ்வாறு இடம் கிடைக்கும். ஆஸ்ரமத்திலிருந்து மதிய உணவு எடுத்துச் செல்லுங்கள் என்று, ஒரு பெரிய தேக்சாவில் சுவையான தயிர் சாதம், நார்த்தங்காய் ஊறுகாய், தேங்காய்த் துவையல் என்று 10.30 மணிக்குள் பஸ்ஸில்

ஏற்றியாகி விட்டது. நாங்கள் தான் எங்கள் சாமான்களை ஏற்றாமல், தயாராக இல்லாமல் இருந்தோம். ஐயா அவர்களின் நிர்வாகத் திறமையும், பகவான் பக்தர்கள்பால் அவர்காட்டிய பரிவும் எங்களை பிரமிக்கவைத்துவிட்டது.

ஒவ்வொரு முறையும் ஆஸ்ரமம் வரும்போது ஏதாவது லீலை கூறும்படிச் சொல்வார்கள். என்னையும் ராஜசேகர்ஜியையும் சேர்ந்து போற்றிக்கலிவெண்பா பாடச் சொல்வார்கள். சாமி 1977லேயே திருவிளையாடற்புராணம் எழுதச் சொன்னார்களே. 20 ஆண்டுகள் சென்று விட்டனவே என்று திருவிளையாடற்புராணம் எழுத ஆரம்பித்தேன். முதல் லீலையை, பிரதான் மந்திரின் நுழைவாயிலில் தன்னருகே அமரச்செய்து, வாசிக்கச் சொல்லி கேட்டு ஆசிர்வதித்தார்கள்.

சாமிக்கு சிறிது சிறிதாக உடல் நலம் குன்ற ஆரம்பித்தது. 2000 ஆண்டில் ஏப்ரல் மாதம் சாமி மிகவும் சுகமில்லாமல் இருப்பதாகக் கேள்விப்பட்டு அன்றிரவே நானும் ராஜசேகர்ஜியும் பஸ்ஸில் திருவண்ணாமலை கிளம்பினோம். மறுநாள் காலை சாமி ஆஸ்ரமம் வரும் நேரம். வரிசையில் நின்று கொண்டோம். சாமியின் கார் மெதுவாக வந்தது. ஆனால் சரிந்து போய் அமர்ந்திருந்ததால் சாமி உட்கார்ந்திருப்பதே தெரியவில்லை. கார் நேரே பர்ணசாலைக்குச் சென்று விட்டது. நானும் ராஜசேகர்ஜியும் டைனிங்ஹால் சென்று அவசர அவசரமாக காலை உணவை முடித்துவிட்டு, கார் போகும் பாதையில் வந்து நின்று கொண்டோம். சாமி சுதாமா திரும்பும் போது தரிசிக்கலாம் என்ற ஆசை. அதற்குள் எங்களைத் தேடி சாமி ஆள் அனுப்பி விட்டார்கள். பர்ணசாலைக்கு ஓடினோம். சாமியை வணங்கிப் பணிந்தோம். சாமி பழைய நிகழ்ச்சிகளையெல்லாம் நினைவு கூர்ந்தார்கள். சுப்பையாமடத்தில் எவ்வளவு நன்றாக இருந்தது. செண்பகம்மாவின் உடன் பிறந்தவர்கள் புஷ்பம்மாவும்,

அருணாகிரி நாடாரும் தான் இருக்கிறார்கள் என்றார்கள். முருகேஷ்ஜியைப் பற்றி சொல்லி, ராஜம்மாள் ஒருமுறை இந்த பிச்சைக்காரனிடம் முருகேசனை ராஜா என்று சொல்கிறீர்களே, எந்த நாட்டுக்கு ராஜா என்று கேட்டார். இந்த பிச்சைக்காரனின் இதயத்தை ஆட்சி செய்கிறார் என்று சொன்னேன் என்றார்கள். திருவிளையாடற்புராணம் சொல்லச் சொன்னார்கள். கௌரிலீலையும், உலவாக்கிழி கொடுத்த லீலையும் சொன்னேன். மாதேவகியையும் விஜிம்மாவையும் அதைத் திரும்பச் சொல்லச் சொன்னார்கள். இந்தியாவில் அந்தணர்கள் மதிக்கப்படுகிறார்கள் என்று நீ நினைக்கிறாயா என்று இருமுறை கேட்டார்கள். என்னபதில் சொல்வது என்று தெரியாமல் மௌனமாக இருந்தேன். பர்ணசாலை அருகிலேயே சாமிக்கு கழிப்பறை வசதி செய்யப்பட்டிருந்தது. கம்பீரமாக ராஜநடை நடந்துவரும் சாமி, மிகவும் சிரமத்துடன் ரவிசார் உதவியுடன் மெல்ல மெல்ல அங்கு நடந்து சென்றது, நெஞ்சத்தைப் பிழிவதாக இருந்தது. சாமியின் பாதத்துக்கு எண்ணெய் போட்டு மசாஜ் செய்துவிடும் பாக்கியம் கிடைத்தது. சாமியின் கால்கள் ஒரு கால்பந்து விளையாட்டுக்காரர் கால்போன்று வலிமையாக இருப்பதை உணர்ந்தேன். நான் மாற்றி ராஜசேகர்ஜி மாற்றி சாமிக்கு விசிறிக் கொண்டே இருந்தோம். ராஜேஸ்வரி அக்கா மிகவும் சிரத்தையுடன் சாமிக்கு பத்திய உணவுகளோடு பல்வேறு உணவுகளைச் சமைத்து அனுப்பிக் கொண்டேயிருந்தார்கள். சாமி ராஜசேகர்ஜியைத் தன் அருகில் அமரச்செய்து, என்னை ராஜசேகர்ஜி அருகில் அமரச்செய்தார்கள். மாதேவகி எங்களுக்கு அன்புடன் உணவு பரிமாறினார்கள். சாப்பிட்டு முடித்தவுடன், மாதேவகியை எங்கள் இருவரையும் அபோடுக்கு அழைத்துச் செல்லச் சொன்னார்கள். மாதேவகி எங்களை அழைத்துச் சென்று ஒவ்வொரு அறையாகக் காட்டினார்கள். ஆறுமணி நேரத்திற்கு மேல் சாமியுடன் இருக்கக்கூடிய பாக்கியம் கிடைத்தது. மதியம் 2½

மணியளவில் ஆசிர்வாதம் செய்து, உடனே ஊர்திரும்புங்கள் என்று அனுப்பி வைத்தார். ஒவ்வொரு பஸ்ஸாக மாறி நள்ளிரவில் மதுரை வந்து சேர்ந்தோம்.

சாமி சென்னையில் ரமணா க்ளினிக்கில் சேர்க்கப்பட்ட போது மதுரை மகளிர் 7 பேர், திரு. ஆனந்தராஜ் குழுவினருடன் வந்து, 3 நாட்கள் அகண்டமாக சாமி சிலையைச் சுற்றி வந்து நாமம் சொன்னோம். அக்டோபர் மாதத்தில் மதுரை பக்தர்கள் ஒரு குறிப்பிட்ட நாளில் தரிசிக்க வரலாம் என்ற தகவல் வந்தது. ராஜசேகர்ஜி, லம்போதரன், நான் மூவரும் சென்னை சென்றோம். கண்களை மூடி சாமி அமர்ந்திருந்த காட்சி, நெஞ்சத்தை உருக்குவதாக இருந்தது. நாங்கள் பக்கத்து அறையில் இருந்த போது, சாமி அழைப்பதாக எங்கள் மூவரையும் ஜஸ்டிஸ் ஐயா அழைத்துச் சென்றார்கள். நாங்கள் மூவரும் சாமியின் திருமுன் நின்றோம். அமைதியாக, ஆழமாக எங்கள் மூவரையும் பார்த்தார்கள். சிறிது நேரம் சென்றபின் திலகவதி திருவிளையாடலிலிருந்து பாட்டுப்பாடு என்றார்கள். எனக்கு மூளையே வேலை செய்யவில்லை. ஒரு பாட்டும் நினைவுக்கு வரவில்லை. சிறிதுநேரம் சென்றபின் தக்ஷிணாமூர்த்தி பற்றிய “கல்லாலின் புடை” என்ற பாடலை ஒரு வழியாகப் பாடி முடித்தேன். மூவருக்கும் ஆளுக்கு ஒரு ஆப்பிளை அன்புடன் தந்து ஆசிரிவதித்தார்கள்.

நவம்பர் மாதம் கடைசி வாரத்தில் சாமி ஆஸ்ரமம் வந்துவிட்டார்கள். நாங்கள் சாமி ஜயந்திக்காக நவம்பர் 30ம் தேதி ஆஸ்ரமம் சென்றோம். நள்ளிரவில் சாமியின் சிலையைச் சுற்றி வந்து நாமா சொல்லிக் கொண்டிருந்த போது வீல்சேரில் வந்து ஆசிர்வதித்தார்கள். மறுநாள் திரு. லீலோசோவிக் புத்தகத்தை வாங்குவதற்காக சாமியின் அருகில் செல்லும் பாக்கியம் கிடைத்தது. பின் ஜனவரியில் ஆஸ்ரமம் வந்து நாமா சொல்லிக் கொண்டிருந்தோம்.

எல்லோரையும் வரிசையில் அனுப்பி, அபோட் ஜன்னல் வழியாகப் பார்ப்பதற்கு அனுமதித்தார்கள். அந்த பலஹீனமான நிலையிலும் சாமி தன் கைகளைத் தூக்கி அனைவருக்கும் ஆசிர்வாதம் செய்தபடியே இருந்தார்கள். பிப்ரவரி மாதம் 20ம் தேதி எங்கள் வீட்டில் தூங்கிக் கொண்டிருந்த போது அதிகாலை 3 மணிக்கு விழிப்பு ஏற்பட்டது. சாமி அந்த அறையில் இருப்பது போன்ற ஒரு உணர்வு. எழுந்து உட்கார்ந்தபடி நாமா சொல்ல ஆரம்பித்து விட்டேன். அதன் பிறகு தூங்கவில்லை. சுமார் 4 மணிக்கு ஆஸ்ரமத்திலிருந்து சாமிநாதன் சார் போன் பண்ணி, சாமி ஸித்தி அடைந்துவிட்ட செய்தியைக் கூறினார். உலகத்தில் எல்லா இயக்கங்களும் நின்று விட்டதுபோல் இருந்தது. அனைவரும் புறப்பட்டு ஆஸ்ரமம் சென்றோம். எங்களுக்கு ஆசிமொழிகூறி, அன்பு மொழி பேசி, அலை அலையாகப் பொங்கிவரும் அற்புதச்சிரிப்பால் உள்ளங்களைக் கொள்ளை கொண்ட அன்பு தெய்வம் அமைதியாக வீற்றிருந்தார். உள்ளத்தில் ஏற்பட்ட உணர்ச்சியை சொல்லத் தெரியவில்லை. முற்றிலும் வெறுமையாக உணர்ந்தேன். மறுநாள் அலங்கரிக்கப்பட்ட பூப்பல்லக்கில் அந்த அன்பு தெய்வத்தை ஆஸ்ரமகிரிவலப் பாதையில் ஊர்வலமாகச் சுமந்து வந்தார்கள். மதுரையில் சித்திரைத் திருவிழாவின் முக்கிய அம்சம் அழகர் எதிர்சேவை. சாமியின் ஊர்வலம், அழகர் பல்லக்கில் எழுந்தருளுவதைப் போன்றே இருந்தது. பல்லக்கிற்கு தோள் கொடுக்கும் பாக்கியம் குமாரவேலுக்குக் கிட்டியது. பக்தர்களுக்கு என்றும், எப்பொழுதும் அருள்புரிய அன்புத்தெய்வம் சமாதிக் கோயிலில் குடிகொண்டார். இன்றும் யோகிராம்சுரத்குமார் மகாலிங்கமாக அருளாட்சி புரிந்து கொண்டு இருக்கிறார்.

தன் ஆன்மீக வாரிசு என்று பகவான் யோகிராம்சுரத்குமார் அவர்களால் முத்திரை பதிக்கப்பட்ட ஜஸ்டிஸ் ஐயா அவர்களின் வழிகாட்டுதலின்படி,

யோகிராம்சுரத்குமார் மகாலிங்கத்திற்கு, நித்ய பூஜை சிரத்தையுடன் சிறப்பாக நடைபெற்றுவருகிறது. சாமிக்கு மிகவும் பிடித்தமான நாமசங்கீர்த்தனம் சாமியின் திருவுருவச்சிலையைச் சுற்றி அகண்டமாக நடந்து வருகிறது. சாமிக்கு பிடித்தமான மற்றொரு விஷயம் அன்னதானம். காலையிலிருந்து இரவு வரை, வரும் அனைத்து பக்தர்களுக்கும் பிரசாதம் வழங்கப்படுகிறது. தன் சமாதிக்கோவிலில் குடிகொண்டு பகவான் யோகிராம்சுரத்குமார் நமக்கெல்லாம் அருளாசிகளை வாரி வழங்கிக்கொண்டு இருக்கிறார். அனைவரும் ஆஸ்ரமம் சென்று நாமகீர்த்தனம் செய்து, அவர் அருள்மழையில் நனைந்து பேரானந்தம் அடைவோம்.



## கிளிக்கண்ணி இயற்றச் சொல்லியருளிய லீலை

2004ம் வருடம் ஆகஸ்டில் என் தங்கை உமா எனக்கு போன் பண்ணினாள். திருமதி. வாசுகிஜெயராஜ் உமாவுக்கு போன்பண்ணி, பூஜ்யஸ்ரீஸ்ரீமுரளீதரஸ்வாமிஜி நாடி ஜோதிடம் பற்றிக் கேட்டதாகவும், உமாவுக்கு அது பற்றி ஏதும் தெரியுமா என்று கேட்டார்களாம். சாமி முன்னிலையில் திரு.வெங்கட்ரமணி எனக்கு நாடி ஜோதிடம் பார்த்த விஷயம் உமாவுக்குத் தெரியுமாதலால், உமா எனக்கு போன் பண்ணி எனக்குத் தெரிந்த விஷயங்களை Dr.பாக்யநாதனிடம் தெரிவிக்கும்படி, டாக்டரின் போன்நம்பரையும் கொடுத்தாள். டாக்டருக்கு போன் பண்ணி, நாடி ஜோதிடம் பார்த்த விபரத்தைச் சொல்ல ஆரம்பித்தவுடன் ஒரு நிமிடம் என்று சொல்லி, ஸ்ரீஸ்ரீஸ்வாமிஜியிடம் போனைக் கொடுத்து விட்டார்கள். போனில் ஸ்ரீஸ்ரீஸ்வாமிஜியின் குரலைக் கேட்டவுடன் எனக்கு ஏற்பட்ட சந்தோஷத்தில் திக்கு முக்காடிப்போய் விட்டேன். சாமி முன்னால் எனக்கு நாடிஜோதிடம் பார்த்ததையும், முன்னவன் மருத்துவனும், பின்னவன் அருளாளனுமாம் என்று அதில் கூறியபடி, மூத்தவன் லம்போதரன் பல் மருத்துவனாகவும், இளையவன் குமாரவேல் மிகவும் பக்தியாகவும் இருக்கிறான் என்று சொன்னேன். பெரியசாமித்தூரன் சாமி மீது இயற்றிய பாடல்களை (புண்ணியம் பல கோடி, தெய்வக்குழந்தை பேரை, சின்ன குழந்தையாய் தோன்றுவான்) பாடச் சொன்னார்கள். எனக்குத் தெரியாத பாடல்களைத் தான் பாடி, என்னைத் திரும்பிப்பாடும்படி கூறினார்கள். அந்நேரம் மதியம் 12 மணி. பகவான் யோகிராம்சுரத்குமார் மேல் ஒரு கிளிக்கண்ணி இயற்றி, மறுநாள் மதியம் 12 மணிக்கு தனக்கு போன் பண்ணி அதைக்கூறுமாறு சொன்னார்கள். என்ன எழுதுவது, எப்படி எழுதுவது என்று யோசித்தால், நமக்குத் தெரிந்ததெல்லாம், யோகிராம்சுரத்குமார், சுந்தரேசப்பெருமான், அவர்

நிகழ்த்திய திருவிளையாடல்கள், நான் யோகிராம்சுரத்குமாராகவே பாவித்து வணங்கும் ஸ்ரீஸ்ரீமுரளீதரஸ்வாமிஜி. எனக்கு தெரிந்தபடி ஒரு கிளிக்கண்ணி இயற்றி, சரியாக மறுநாள் 12 மணிக்கு போன் பண்ணி ஸ்ரீஸ்ரீஸ்வாமிஜிக்கு பாடிக் காட்டினேன். நன்றாக எழுதியிருக்கிறாய் என்று பாராட்டினார்கள். பின்னர் மதுரபுரி ஆஸ்ரமத்திற்குச் சென்றிருந்தபோது கிளிக்கண்ணி பாடச்சொன்னார்கள். பாடி முடித்தவுடன் இதில் திலகவதிக்குப் பிடித்த நான்கு சமாச்சாரங்கள் இருக்கின்றன. பகவான் யோகிராம்சுரத்குமார் இருக்கிறார். சுந்தரேசப்பெருமான் இருக்கிறார். வளையல் விற்ற லீலை இருக்கிறது. முரளீதரனும் இருக்கிறான் என்று கூறி முடித்தார்கள். ஸ்ரீஸ்ரீஸ்வாமிஜி பாடலை அங்கீகரித்துவிட்டார்கள் என்று, வானத்தில் பறப்பதைப் போல் உணர்ந்தேன். சரணாகதத்திற்கும் எழுதி அனுப்பச்சொன்னார்கள். அதன்படி சரணாகதத்திலும் இப்பாடல் வெளிவந்துள்ளது

**யோகிராம்சுரத்குமார் கிளிக்கண்ணி**

யோகிராம்சுரத்குமார் என்றே ஒருதரம்
கூவி அழைத்திடுவாய் கிளியே 2
என் உயிர்த்தோழியன்றோ கிளியே
என் உயிர்த்தோழியன்றோ.
என்னவென்றெடுத்துரைப்பேன்
எப்படி நான் செப்பிடுவேன்
வள்ளல் அவன் பெருமையெல்லாம் கிளியே 2
சொல்லுக்குள் அடங்குமோடி கிளியே
சொல்லுக்குள் அடங்குமோடி.
மதுரையின் மன்னன் அவன் சுந்தரேசன் அவன் 2
ஆயர்பாடி கண்ணனடி கிளியே
முரளீதர கிருஷ்ணனடி கிளியே
முரளீதர கிருஷ்ணனடி.
வளையலைப்பூட்டி விட்டு மையலை ஏற்றிவிட்டு 2

லீலைபலகாட்டிவிட்டு கிளியே 2
உள்ளம் கொள்ளைகொண்டு விட்டான் கிளியே
உள்ளம் கொள்ளை கொண்டு விட்டான்.
ஒன்றும் அறியா என்னை உன்மத்தமாக்கிவிட்டு 2
ஓடி ஒளிந்து கொண்டான் கிளியே
தேடிப்பிடிப்பாயடி கிளியே தேடிப்பிடிப்பாயடி
தின்னப்பழம் நிறைய தந்திடுவேன் நான் உனக்கு
யோகிராம்சுரத்குமார் என்றே கிளியே 2
அவன் நாமம் கூறிடுவாய் கிளியே அவன் நாமம் கூறிடுவாய்.



## பஜனாஸ்ரமம் கண்டருளிய லீலை

பகவான் யோகிராம்சுரத்குமார் தனக்கு உலகம் முழுவதும் ஆயிரக்கணக்கில் கோயில்கள் தோன்றும் என்று கூறியிருக்கிறார். அவர் கூற்றுப்படி குமாரகோயில், காணிமடம், ஹோசூர், ஸ்ரீவில்லிப்புத்தூர், மதுரை, தூத்துக்குடி ஆகிய பல ஊர்களில் கோவில் கொண்டு தன் பக்தர்களுக்கு அருள்பாலித்துக் கொண்டிருக்கிறார். குமாரவேலு ஒரு சமயம் பூஜ்யஸ்ரீஸ்ரீ முரளீதரஸ்வாமிஜியுடன் பெரியகுளம் சென்று கொண்டிருந்த போது, கொஞ்சகாலமாக என் மனதில் சிவகாசியில் பகவானுக்கு ஒரு கோயில் வரவேண்டும். அதை உன் மூலமாகச் செய்ய வேண்டும் என்ற எண்ணம் எழுகிறது. உன் தந்தையார் இதற்கு அனுமதி கொடுத்தால் மட்டுமே இதில் ஈடுபட வேண்டும் என்று ஸ்வாமிஜி கூறினார்கள். குமாரவேலு தன் தந்தை ராஜசேகர்ஜியிடம் போன் பண்ணி இவ்விஷயம் பற்றிக் கூறியபோது, நீ ஸ்வாமிஜி சித்தப்படி நட என்று கூறிவிட்டார். பூஜ்ய ஸ்ரீஸ்ரீ முரளீதரஸ்வாமிஜியின் ஆலோசனைப்படி ஜெய்ப்பூரில் பளிங்குக்கல்லால் ஆன திருவுருவச்சிலைக்கு ஆர்டர் கொடுக்கப்பட்டது. பகவானுடைய திருவுருவச்சிலை 2008ம் ஆண்டு டிசம்பர் 3ம் தேதி ஜெய்ப்பூரிலிருந்து சிவகாசி வந்தடைந்தது. பகவான் யோகிராம்சுரத்குமார் ஒருகையைத் தூக்கி ஆசிர்வாதம் செய்தபடியும், இன்னொரு கையால் ஜபம் செய்தபடியும், புன்னைமரத்தடியில் தக்ஷிணாமூர்த்தி கோலத்தில் காட்சி அளிக்கிறார். தற்சமயம் பகவான் யோகிராம்சுரத்குமார் சேவா ட்ரஸ்ட் அமைப்பில், 22, ஞானகிரி ரோடு, சிவகாசி என்ற விலாசத்தில், பகவான் யோகிராம்சுரத்குமார் பஜனாஸ்ரமத்தில் பகவானின் சிலை நிறுவப்பட்டுள்ளது. டிசம்பர் 13ம் தேதி பூஜ்ய ஸ்ரீஸ்ரீமுரளீதரஸ்வாமிஜி சிலையைத் திறந்து வைத்து, பூஜையும் செய்து வைத்தார்கள். மறுநாள் காலையிலிருந்து நித்யபூஜை

ஆரம்பமாகிவிட்டது. காலை 6.30க்கு மாலை அலங்காரம் செய்வித்தபின் நடை திறக்கப்படுகிறது.

திருப்பள்ளியெழுச்சி பாடி, அஷ்டோத்திரம் சொன்னபின் தீபாராதனை நடைபெறுகிறது.

காலை-8.00க்கு ஒருபடி அன்னம் நைவேத்தியம் செய்யப்பட்டு, தீபாராதனை நடைபெறுகிறது.

மதியம்-12.00க்கு தீபாராதனை நடத்தப்பட்டு, நடை சாத்தப்படுகிறது.

மாலை-4.00க்கு மாலை அலங்காரம் செய்தபின், நடை திறக்கப்பட்டு தீபாராதனை நடக்கிறது.

மாலை-6.00க்கு அஷ்டோத்ரம் சொல்லி, ஒரு படி அன்னம் நைவேத்தியம் செய்யப்பட்டு தீபாராதனை நடக்கிறது.

இரவு 8.00க்கு தீபாராதனை செய்து நடை சாத்தப்படுகிறது.

மார்கழி மாதம் காலை 5 மணியிலிருந்து 11 மணிவரையிலும் மாலை 4 மணியிலிருந்து 8 மணிவரையிலும் நடை திறந்திருக்கும்.

பௌர்ணமி, அமாவாசை தினங்களில் பகவானுக்கு சால்வை, தலைப்பாகை மாற்றப்படுகின்றன. பகவான் பூஜ்ய ஸ்ரீஸ்ரீமுரளீதரஸ்வாமிஜி வழங்கியுள்ள ருத்ராக்ஷமாலை அணிந்து காட்சியளிக்கிறார்.

மாதம் ஏதாவொரு ஞாயிற்றுக்கிழமை பகவான் பக்தர்களால், பகவானின் திவ்யமகிமைகளைப் பற்றிய சொற்பொழிவு, மாலை 6-8 நடக்கிறது. நடைதிறந்திருக்கும் நேரத்தில் பக்தர்களின் நாமசங்கீர்த்தனம் நடைபெறுகிறது. பக்தர்கள் பிரார்த்தனைக் கடிதங்கள் எழுதி சமர்ப்பிக்கிறார்கள். ஒவ்வொரு வியாழக்கிழமையும் காலையில் பகவான் திருமுன் பிரார்த்தனைக்கடிதம்

வாசிக்கப்பட்டு பக்தர்களுக்கு பிரசாதம் அனுப்பப்படுகிறது. பகவான் பக்தர்களின் பிரார்த்தனைகளை நிறைவேற்றி அருள்பாலிக்கிறார்.

பகவான் தனக்கு எப்படி கோயில் உருவாக வேண்டும் என்று திட்டமிட்டிருக்கிறாரோ அதன்படி வருங்காலத்தில் நிலம் வாங்கி பிரம்மாண்டமான கோயில் உருவாகும். ஒரு நல்ல ராஜ்யத்தில் ஜனங்கள் பயமில்லாமல் சௌக்கியமாக இருப்பார்கள். அதுபோல் இங்கு மக்களின் நலனுக்காக பகவான் யோகிராம்சுரத்குமார் தர்பாரே நடத்தப் போகிறார் என்று பூஜ்ய ஸ்ரீஸ்ரீ முரளீதரஸ்வாமிஜி சொல்லியிருக்கிறார்கள். குருசேவை மிகப்பெரிய சேவை. பகவானுடைய இந்த மகத்தான காரியத்தில் பக்தர்கள் எந்நெந்த வழியில் பங்கெடுத்துக் கொள்ளமுடியுமோ, அந்தந்த வழியில் பங்கெடுத்து, பகவானின் ஆசிர்வாதத்திற்கு பாத்திரமாவோம்.



ॐ

My dear Tilakavati,

your letter dated 10.12.1976 brought so much joy that the beggar totally forgot that he was a beggar. Having a friend like तिलकवती राजशेखर this beggar is the king of all kings. It is only by the grace of father that I have been fortunate enough to have a friend like you. When are you coming to Tiruvannamalai again? My blessings to dear Lambodara and dear Kumarvelu.

yours sincerely
योगी रामसुरतकुमार

ॐ

Dear Rajshekharji,

This beggar is happy to know that you will be coming to Tiruvannamalai on Dec. 18, 1976. You people have been so kind to this beggar that it is impossible for this beggar to forget Tilakavati and Rajshekharji

My namaste to you, Rajshekharji and to dear Tilakavati

Yogi Ramsuratkumar

om

// Dear Tilakavati, namaste! // 0 //

Your letter dated 7.2.77 so sweet to this beggar!
Happy to know that लम्बोदरा and कुमारकेतु
// are studying better. लम्बोदरा will be
a great success in life and so will be
कुमारकेतु. My father is very fond of
0 both of them. He blesses them both.
I hope your house-temple will be constructed
soon and there will be never any shortage
// of funds in this great work. My father //
will see that डाक्टर राजशेखरजी is recognised
as one of noted dentists of India. //

//

// My namaste to all of you! //

// your योगीरामसूरतकुमार //

// //

ॐ

Dear Tilakavati, my namaste to you!
My namaste to dear Rajshekharji!
My namaste to dear Kumarvelu!
My namaste to dear Lambodara!

This beggar is happy. You are always happy, Tilakavati — this beggar is sure of that. You have very good sons. My father will see that both of them pass the final examination well. Rajshekharji will be having plenty of work in his clinic to keep him always engaged there and you must be having all time to think of this beggar and nothing to disturb you. Ever remembering you, your dear friend,

Yogi Ramsuratkumar

ॐ

Happy new year to Tilakavati, to dear [illegible]
and to children!

Jai Jai Tilakavati, Jai Jai Rajshekhar
Tilakavati Rajshekhar Jai Jai!

Your own yogi Ramsuratkumar
Tiruvannamalai

ॐ

My dear तिलकवती ! नमस्ते ।

Thank you dear Tilakavati! चपाती and चटनी sent by you were very tasteful. Rarely this beggar gets such heavenly food. My blessings to लम्बोदरा and कुमारसेनु! Both of them will study well. Dr. Rajshekhar will give you a lot of news this time when he meets you

Ever remembering you with all. Your योगी रामसुरतकुमार

ॐ TIRUVANNAMALAI
24-5-77

DEAR TILAGAVATI,

THIS BEGGAR IS HAPPY TO LEARN THAT KUMARVELU HAS BEEN ADMITTED IN 7th STANDARD AND LAMBODARA WILL BE GOING TO SCHOOL FROM THE 22ND ONWARDS. MY BLESSINGS TO BOTH OF THEM.

THIS BEGGAR IS GLAD THAT YOU HAD GONE WITH RAJESHARTI AND THE CHILDREN TO THE EXHIBITION OF THE 64 LEELAS IN THE THOUSAND PILLAR MANDAPAM, WHICH YOU EXPLAINED TO THEM. OFCOURSE THOSE 64 LEELAS ARE MY LEELAS. THIS BEGGAR IS HAPPY TO LEARN THAT YOU ARE EQUALLY INTERESTED IN THE PRESENT LEELA.

THIS BEGGAR IS HAPPY
TO LEARN THAT YOU ARE
READING THE LIFE OF
SRI RAMAKRISHNA PARAMAHAMSA

MY FATHER HAS
ACCEPTED THAT PRAYER
OF YOURS MENTIONED
AT THE END OF YOUR
LETTER.

MY BLESSINGS
TO THE CHILDREN
YOUR HUSBAND AND
YOURSELF

YOURS SINCERELY,

Yogi Ramsuratkumar



OM TIRUVANNAMALAI
24.5.77

DEAR RAJASEKHARAN,

THIS BEGGAR IS HAPPY TO LEARN THAT KUMARAVEL ~~HAS~~ BEEN ADMITTED IN THE NEW SCHOOL. I AM GLAD THAT YOU ENJOYED SEEING THE 64 LEELAS OF LORD SUNDARESHWARA EXPLAINED AND ENLIGHTENED BY TILAGAVATY. MY FATHER'S BLESSING ON YOU ALL FOR FEELING THAT YOU WERE ALL ~~WERE~~ THEN WITH THIS BEGGAR.

MY BLESSINGS TO YOUR CHILDREN YOUR WIFE AND TO YOURSELF.

DR MEENAKSHI SUNDARAM WHO IS HERE ENQUIRED WHETHER TOOTH SET HAS COME. ONCE AGAIN MY BLESSINGS

YOURS SINCERELY

Yogi Ramsuratkumar

ॐ TIRUVANNAMALAI
24.6.7

DEAR LAMBODARAN,

THIS BEGGAR IS LOOKING FORWARD TO YOUR VISIT TO TIRUVANNAMALAI WITH YOUR FATHER MOTHER AND BROTHER

BY FATHER'S GRACE YOU WILL STUDY WELL AND BECOME A GREAT MAN

MY BLESSINGS TO YOU

YOURS SINCERELY,

Yogi Ramsuratkumar

ஓம். TIRUVANNAMALAI
28-10-78

DEAR KUMARAVEL

THIS BEGGAR IS HAPPY TO LEARN THAT ALL OF YOU WOULD BE COMING TO TIRUVANNAMALAI.
IT IS GOOD YOU ARE HAVING TUITION IN ENGLISH AND MATHS
BY FATHER'S GRACE YOU WILL BECOME A GOOD AND GREAT MAN
MY BLESSINGS TO YOU

YOURS SINCERELY

Yogi Ramsuratkumar

ॐ 4.9.77

My dear Rajasekarji,

My namaste.

This beggar received your letter dated 31.8.77 and was very happy to know of the Leela of Somasundaresware who came to help the poor old lady in closing the breaches. Thank you for narrating this Leela to this dirty sinner. This beggar has appealed to Somasundara to do likewise and help you in the construction of your temple. My dear Somasundara has taken charge of the work and he will see that it is completed soon in a grand manner. Please do, what the engineer has asked to do regarding the cracks in the bed-room walls. It will be very very strong and durable temple. My thanks to Soma-Sundara. Nothing to bother.

Yours sincerely,

योगी रामसुरत कुमार

(P.T.O.)

My Salutations

to dear तिलकवती !

to dear लम्बोदरा !

and to dear कुमारवेलु !

Yogi Ramsuratkumar



Dear Tilakavati,

Namaste!

May your devotion to the lotus feet of my father grow day by day! May you be the most fitting child of father! May you always sing the great Name and great Glory of my father!

May my father bless you for what you are doing for this dirty son of his!

My blessings to लम्बोदरा!

My blessings to कुमरवेलु!

Thanks!

Yogi Ramsuratkumar

எங்கே குருவின் அருளில் நம்பிக்கை இருக்கிறதோ
அங்கே விதி விளையாடாது.




பகவான் யோகிராம்சுரத்குமார் சேவா டிரஸ்ட்
22, ஞானகிரி ரோடு, சிவகாசி - 626 189.
Cell : 9843088826, 9442620809